

## கலியாண காலம்

கலியாணம் செய்பவர்களுக்குண்டாகும் கவலை களுக்கு கணக்குண்டோ? ஆடையைப் பற்றிய கவலைகள் வரையில் நீக்குவது எமது பொறுப்பு. நல்ல பொருள்தானா? நீடூழி உழைக்குமா? நிறம் குன்றுமலும் மாறுமலும் நிற்குமா? விலை பெறுமா? எனும் பல கவலைகளை அறவே ஒழித்து, எமது சொல்லில் நம்பிக்கையை நிறுத்தி, எம்மிடம் தேவை யான பொருள்களை வாங்குவதினுல், உங்களுக்கு என்றும் அதிருப்தி ஏற்படாது. அதிருப்திக்குக் காரணமே முணு முணுத்தலும் முகக் கோணலும்.

## விவாஹ சமயம்

விவாக சமயத்தில் முணுமுணுத்தலும் முகக்கோண லும் இருக்கலாமோ? எமது பொருள்களைப்பற்றி ஒருவரும் குறைகூற இடந்தராததுமன்றி பலரும் மெச்சிக்கும்படியான வன்மையுடையனவா யிருக் கின்றன. "ஓ! இது புது மாதிரி!" "இத்தனை அழகியது இது வரையில் பார்த்ததே யில்லை!" "எங்கே வாங்கினீர்கள்?" "என்ன விலை?" எனும் வார்த்தைகளை விவாஹ சமயத்தில் கேட் கூடிய சேலைகள், பாவாடை, தாவணி பெங்கால் பிரிண்டட் சேலைகள், ரவிக்கைகள், ஜம்பா கள், பட்டு ஜரிகை துப்பட்டாக்கள், வேஷ்டிகள், பல தினுசு சுதேசி ஸில்க் ரகங்கள் மடிகள் எங்கள் கடையில்தான் கிடைக்கும். ஒவ்வொன்றிற்கும் உத் திரவாதமும் உறுதிமொழியும் உடனிருக்கின்றன.

## முகூர்த்த வேளை

முகூர்த்த வேளை தவறுமலிருக்க எவ்வளவு ஜாக்கிரதை வேண்டும்? அதைப் போலவே எமது உறுதிமொழிகள் தவறுதிருக்க வேண்டிய ஜாக்ரதைகளை நாங்களும் கவனித்து வருவதால் 42 வருஷகாலமாக எங்களையும் எமது பொருட் களையும் பலர் உகந்து ஆதரித்து வருகின்றனர்.

○

# S. R. B.

# குப்புசாமி அய்யர் & ஸன்

(Formerly S. R. பாலுசாமி அய்யர் & ஸன்ஸ்)

மதுரை, பனாரஸ், கோல்லேகாலம், காஞ்சிவரம், பட்டு ஜவுளி வியாபாரிகள்

**83, நயினியப்ப நாயக்கன் தெரு, பார்க் டவுன், மதராஸ் :: போன் நெ. 3506**

**230, கீழமாரெட் தெரு, மதுரை. போன் நெ. 36**

## வாலாயமான பழைய கடை

## நெம்பர் 83 இதுதான்




எஸ்.ஆர்.பி.குப்புசாமி அய்யர் ஸன்



# கொலம்பியா ரிகார்டுகளில்

# மனோன்மணி

(டாக்கி
பாட்டுகள்)





GE.6054

.S. கிருஷ்ணன்
.A. மதுரம் } பாடிய ஊன்னு ஒரு

.S. கிருஷ்ணன் பாடிய தீனக்கருணாகரனே
(திருநீலகண்டர் கதை)

**ரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.**

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும் :

கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி.

# உங்கள் பாதுகாப்பிற்கு

# பீமசேனன்!



இன்று நடைபெறும் யுத்தத்தில் உங்களைப் பாதுகாத்துக் கொள்ள ஏ. ஆர். பி. யின் உதவியை நாடுகிறீர்கள். நீங்கள் தேடிய பொருளையும் ஐச்வர்யத்தையும் பாதுகாக்க அஜாக்ஸ் பண்டங்களை நம்புங்கள். அவை உறுதியின் உருவம் என்றால் மிகையாகாது.

இரும்புக் கோட்டை போன்றவை அஜாக்ஸ் ஸ்டீல் காபினெட்டுகள். அஜாக்ஸ் இரும்புப் பெட்டிகளோ, தீயும் திருடனும் தீண்ட முடியாதவை. உங்கள் வீட்டில் அஜாக்ஸ் பண்டங்கள் இருந்தால் உங்கள் பொருளை பீமசேனனே காத்து நிற்பது போலாகும்.

# அஜாக்ஸ்!






106, அரமனைக்காரத் தெரு
மதராஸ்

பிராஞ்சு:
5, வெரைட்டி ஹால் ரோடு
கோயமுத்தூர்

இதைவிடச் சிறந்த தமிழ் படம் இதுவரை தயாரிக்கப்படவில்லை!



கூடிய சீக்கிரம் உங்களை மகிழ்விக்க வருகிறது!

JUPITER PICTURES

# குபேர குசேலா

Direction
R. S. MANI & B. S. RAMAYYA

SIP RELEASE

| | | |
|---|---|---|
| சின்னப்பா | நாராயணராவ் | ராஜகுமாரி |
| சிவன் | பாலசுப்ரமணியம் R. | ஜானகி |
| கோவிந்தன் | பாலசுப்ரமணியம் D. | மீனலோசனி |
| துரைராஜ் | கிருஷ்ணன் | மதுரம் |

டைரக்ஷன்: R. S. மணி, B. S. ராமையா

பாட்டு:
பாபநாசம் சிவன் - உடுமலை நாராயண கவி

ஸ்டுடியோ:
நியூடோன்

விவரங்களுக்கு :— ஸௌத் இந்தியா பிக்சர்ஸ், காரைக்குடி

# கல்கி பொருளடக்கம்

மலர் 2 இதழ் 28

1943 மே 1

சுபானு௵ சித்திரை௴ 18௳





★




★

இந்த இதழ் மேலட்டையைப் பார்த்தும், "இது என்ன ஆச்சரியம்?" என்று சில நேயர்கள் ஆச்சரியப்படலாம். "இவர் இவர்தானா? அவர் அவர்தானா அல்லது வேறு எவராயினுமா?" என்றெல்லாம் சந்தேகிக்கலாம். ஆச்சரியம், சந்தேகம் ஒன்றும் வேண்டியதில்லை. மேடையில் உட்கார்ந்திருப்பவர் தற்காலத்தில் "தமிழ்நாட்டின் சிறந்த கவி" என்று பாராட்டப்படும் ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளை; அவர் அளிக்கும் கவிதைப் புத்தகப் பரிசை அவ்வளவு அடக்க ஒடுக்கத்துடன் வாங்கிக் கொள்கிறவர், பதினாயிரக் கணக்கான தமிழ் மக்களைத் தமது ஹாஸ்ய நடிப்பினால் மகிழ்வித்து வரும் ஸ்ரீமதி டி. ஏ. மதுரம். ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை தகுந்த பாத்திரத்துக்குத் தான் பரிசு அளித்தார் என்பது ஸுபானு வருஷப் பிறப்பு தினத்தில் தெரிய வந்தது. அன்று இரவு ரேடியோவில் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனும் ஸ்ரீமதி டி. ஏ. மதுரமும் நடத்திய கச்சேரியில் ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளையின் அழகான பாடல்கள் சிலவற்றை ஆனந்தமாகப் பாடினார்கள். முக்கியமாக, "பாட்டுக்கொரு புலவன் பாரதியடா!" என்று தொடங்கும் பட்டிக்காட்டான் பாட்டு, மிகவும் நன்றாயிருந்தது. ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் தம்பதிகள் இசைக் காதலர்கள் மட்டுமல்ல — தமிழ்க் காதலர்களுங்கூட — என்பது அன்றைய தினம் வெளியாயிற்று.

# THE TRINITY BANK LIMITED,

## TRICHINOPOLY.

### Statement of Account as on 31st March 1943.

| CAPITAL AND LIABILITIES. | Rs. A. P. | PROPERTY AND ASSETS. | Rs. A. P. |
|---|---|---|---|
| Capital (Paid up) | 1,00,000—0—0 | Cash on hand | 1.14.536-15—3 |
| Reserve Funds | 88,500—0—0 | Cash with Bankers | 2.12.854—5—9 |
| Deposits | 31.82.099—4—0 | Investments: G.P. Notes &c | 9.25.372-15—1 |
| Sundries | 47,179—8—5 | Loans and Advances | 21.57.083—9—4 |
| Profit and Loss A/C | 24.165-13-10 | Sundries | 32.096-12-10 |
| TOTAL ... | 34,41.944-10—3 | TOTAL ... | 34.41.944-10—3 |

(Sd.) O. R. RAMACHANDRA IYER,
*Accountant*

(Sd.) L. N. S. MANI,
*Managing Director*

# இண்டோ கம்மர்ஷியல் பாங்க் லிமிடெட்

*ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:*
மாயவரம்

*ஸெண்ட்ரல் ஆபீஸ்:*
மதராஸ்

*சென்னை ஆபீஸ்கள்:*
சைனா பஜார், மாம்பலம், மயிலாப்பூர்.

*கிளை ஆபீஸ்கள்:*

| | | |
|---|---|---|
| ஆமதாலவலஸா | கும்பகோணம் | திருநெல்வேலி |
| அனகாபள்ளி | மதுரை | திருவாரூர் |
| கள்ளிக்கோட்டை | பாலக்காடு | திருச்சிராப்பள்ளி |
| சிதம்பரம் | புதுக்கோட்டை | வேலூர் |
| காஞ்சீவரம் | சீயாழி | விருதுநகர் |
| ஈரோடு | தாடேபள்ளிக்கூடம் | விஜயநகரம் |
| காரைக்குடி | தஞ்சாவூர் | |

எல்லாவித பாங்க் அலுவல்களும் ஏற்றுக் கொண்டு நடத்தப்படும்.

**S. N. N. Sankaralinga Iyer,**
*Managing Director.*




# கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்


## என்ன சேதி?

### சென்னைத் தேர்தல்

இந்தியா சட்ட சபை என்பதாக ஒன்று இருக்கிறது என்பதையே நம்மில் பலர் மறந்துபோய் விட்டோம். சட்ட சபைப் போரில் பூரண நம்பிக்கை வைத்திருந்த ஸ்ரீ சத்திய மூர்த்தி அவர்கள் தாம் வீர சொர்க்கத்தை அடையும் போதும் நமக்கு அதை ஞாபகப்படுத்தி விட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய மரணத்தினால் இந்தியா சட்ட சபையில் ஏற்பட்டிருக்கும் காலி ஸ்தானத்திற்கு உபதேர்தல் நடக்கப்போகிறது. இந்த ஸ்தானத்திற்கு ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி (காலஞ்சென்ற தலைவர் ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்காரின் புதல்வர்) நிற்கிறார் என்பது சென்னை வாசிகளும், பொதுவாகத் தமிழ் நாட்டாரும் மகிழ்ச்சியடையவேண்டிய விஷயம். ஒரு காலத்தில் சென்னை மாகாணம் "இருளடைந்த மாகாணம்" என்று பெயர் வாங்கியிருந்தது. அந்தப் பெயரை மாற்றிச் சென்னை மாகாணத்தை தேசிய இயக்கத்தின் முன்னணியில் கொண்டு வந்து நிறுத்திய தலைவர்களில் பிரதானமான ஒருவர் ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார். தேச பக்தியிலும், சுதந்திர ஆர்வத்திலும் தகப்பனாரைக் காட்டிலும் ஒரு அடி முன் சென்று நிற்பவர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி என்று அறிகிறோம். மகாத்மாவினிடம் அழியாத பக்தி பூண்டவரும் சத்தியாக்கிரஹ இயக்கத்தில் சேர்ந்து சிறை சென்றவருமான ஸ்ரீமதி அம்புஜம்மாளின் இளைய சகோதரர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி. தேர்தல் என்று ஏற்படுமானால் சென்னை நகர வோட்டர்கள் அவரைத்தான் தேர்ந்தெடுப்பார்கள் என்பது பற்றி நமக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. சென்னை நகருக்கும் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி அவர்களுக்கும் முன் கூட்டியே நமது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

### ஒரு சந்தேகம்

தென்னாட்டிற்குத் "திராவிடஸ்தான்" மறுக்கப்பட்டால், அதைப் பெறுவதற்கு ஒரு நல்ல யுக்தி இருக்கிறதென்று ஸ்ரீ ராமசாமி நாயக்கர் திருச்சியில் சொன்னாராம். அந்த யுக்தி யாவது:— "தென்னாட்டில் எல்லாரும் (எல்லாப் பிராமணரல்லாதாரும்!) முஸ்லிம்களாகிவிட வேண்டும்; அப்போது ஜின்னாவுக்குக் கிடைக்கும் பாகிஸ்தான் நமக்கும் தானே கிடைத்து விடும்" என்பதுதான். இந்த யுக்தியைத் தாம் விளையாட்டாகச் சொல்லவில்லையென்றும், வினையாகவே சொல்வதாகவும் ஸ்ரீ நாயக்கர் அழுத்திச் சொன்னாராம். அப்படியென்றால், நாமும் விளையாட்டாக இல்லாமல் வினையாகவே ஒரு சந்தேகம் கேட்க விரும்புகிறோம். ஸ்ரீ ராமசாமியாரின் யுக்தியின்படி தென்னாட்டில்



ஜனாப் ராமசாமி ராவுத்தர்

எல்லாரும் முஸ்லிம்களாகி விடுவதாக வைத்துக் கொள்வோம். அப்போதும் பாகிஸ்தானில் ஒரு பாகமாகத்தானே தென்னாடு இருக்கும்? அப்போதும் ஜனாப் ஜின்னா, நவாப் லியாகத் அலி கான் முதலியவர்களின் ஆதிக்கத்தில் தானே நாம் இருக்கவேண்டும்! ஸ்ரீ ஈ. வே. ராமசாமிப் பெரியார் நாளைக்கு ஜனாப் ஈ. வே. ராமசாமி ராவுத்தர் ஆகிவிட்டால், அதனால் அவருடைய தனித் தலைமை தென்னாட்டில் எப்படி ஏற்படும்? அல்லது தென்னாடுதான் எப்படித் தனிச் சுதந்திரம் அடைந்துவிடும்?

### கல்லறை மர்மம்

இயேசு கிறிஸ்து நாதர் கல்லறையிலிருந்து மீண்டும் புத்துயிர் பெற்று வந்து உலகத்துக்குப் போதனை செய்ததைப் பற்றிய அற்புதத்தைக் கேட்டிருக்கிறோம். ஆனால் இப்பொழுது கிறிஸ்தவ மதம் பரவியிருக்கும் ஐரோப்பிய நாடுகளின் கல்லறையிலிருந்து சர்வ தேசத் தகராறுகளும் பயங்கரப் பூசல்

# [illegible] சுதந்திரம் - ஜின்னா பிரசங்கம்

உம்மன்













வொட்டாமல் செய்ததுமன்றி, தவறான பஸ்ஸிலும் பிரிட்டிஷார் நம்மை ஏற்றிவிட்டார்கள்."
அடிமைத்தனம்


இருவருக்கும் சுதந்திரம் கிடைக்கவொட்டாமல் முட்டுக்கட்டை போடுபவர்கள் காங்கிரஸும் ஹிந்து தலைவர்களும்தான் என்பதை நினைக்கும்போது எனக்கு எவ்வளவோ துக்கமாயிருக்கிறது!


இந்த அத்தியாயத்தை இத்துடன் முடித்து விடுவோம்.
பழைய சண்டை
சச்சரவுகள்


இரண்டுபேரும் சம ஆசனங்களில் உட்கார்ந்து சமரச முடிவுக்கு வரலாமே!
மகாத்மா காந்தி
ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை மகாநாடு
ஜின்னா

களும் கிளம்புவதைக் கேட்கிறோம். உலகத்தில் இன்னும் தகராறுகளுக்கு இடம் இருக்கிறதென்றுதானோ என்னவோ கல்லறைகளி லிருந்து வேறு அவை 'குபு குபு'வென்று புறப்பட்டு வந்து கொண்டிருக்கின்றன.

விஷயம் என்னவென்றால், சமீபத்தில் ரஷ்யப் போர் முனையில் ஸ்மாலன்ஸக் என்ற இடத்துக்கருகில் பத்தாயிரம் சமாதிகளை ஜெர்மானியர் கண்டு பிடித்தார்களாம். "கொலை! கொலை! பத்தாயிரம் போலந்து தேசத்து ராணுவ உத்தியோகஸ்தர்களை ரஷ்யர்கள் கொலை செய்து இங்கே புதைத்து விட்டார்கள்!" என்று கோபெல்ஸ் பிரசாரத்துக்கு ஆரம்பித்தார். அதைக் கேட்டு போலிஷ் சர்க்கார் "ரஷ்யர்கள் போலந்தைப் படையெடுத்தபோது பத்தாயிரம் போலிஷ் ஆபீஸர்கள் காணாமற் போனது வாஸ்தவந்தான்" என்று ஜெர்மன் பிரசாரத்தை ஆமோதிப்பது போல் சொல்லி வைத்தார்கள்.

ஜெர்மன் பிரசாரத்தின் சூதுவாதுகளால் ஏற்கனவே ஏமாந்து போய் தேசத்தைப் பறி கொடுத்து நிற்கும் போலிஷ்காரர்கள் கோபெல்ஸ் சொல்லியதை நம்பியிருக்கவே கூடாது. ஒரு வேளை அவர் சொல்லியது உண்மையாயிருந்தாலும் இருக்கலாமென்று சந்தேகம் தோன்றினால் ரஷ்ய சர்க்காரையே நேரில் கேட்டிருக்க வேண்டும். அப்படியெல்லாம் செய்வதற்குப் பதிலாக செஞ்சிலுவைச் சங்கத்தைப் பற்றி விசாரணை செய்யச் சொன்னது தவறு. இந்த அசட்டுக் காரியங்களின் பலன் ரஷ்யா போலந்து மீது கோபித்துக்கொண்டு ராஜீய உறவை தாற்காலிகமாக ரத்து செய்து விட்டதில் ஆச்சர்யம் ஒன்றும் இல்லை.

## வரப் போகும் தமாஷா!

ஊருக்கெல்லாம் தமாஷா வரி விதிக்கும் அதிகாரமுள்ள சென்னைக் கார்ப்பொரேஷன் கட்டிடத்திலேயே சமீபத்தில் ஒரு பெரிய தமாஷா நடைபெறப் போகிறது. அது என்ன என்று தெரியுமா? சென்னை சர்க்கார் நகர முனிஸிபல் சட்டத்தின் ஒரு குறிப்பிட்ட பிரிவைத் திருத்திச் சட்டமாக்கப் போகிறார்கள். அது அப்படிச் சட்டமாக்கப்படும் தினத்தன்று ஒரு கார்ப்பொரேஷன் அங்கத்தினர் சபைக் கூட்டத்துக்கு வரமாட்டார். அவர் கோட்டு, அங்கவஸ்திரம், டர்பன் முதலியன தரித்தவராய் ரிப்பன் கட்டிடத்தின் வாசற்படியில் நின்றுகொண்டு கார்ப்பொரேஷன் கமிஷனர் எப்பொழுது வெளியில் வரப் போகிறார் என்று எதிர் பார்த்துக் கொண்டிருப்பார். அவர் ஒரு சின்னக் கூட்டத்தையும் கூட்டி வைத்துக் கொண்டிருப்பார். கமிஷனர் கண்ணில் தென்பட்டாரோ இல்லையோ, "புல்லா ரெட்டிக்கு ஜே!" என்று கூச்சல் போடுவார்.

அவர் ஏன் அப்படிச் செய்ய வேண்டும்? இப்பொழுது கார்ப்பொரேஷன் சிப்பந்திகளின் சம்பளங்களை நிர்ணயிப்பது, அவர்களை மேல் பதவிகளுக்கு உயர்த்துவது முதலிய விஷயங்களில் கார்ப்பொரேஷன் அங்கத்தினர் தலையிடுவதற்கு இட மிருக்கிறது. வர வர, சில சிப்பந்திகள் தங்களுக்கு அங்கத்தினர்க ளிடமுள்ள செல்வாக்கை உபயோகித்து மேற்படி அதிகாரத்தைத் துஷ்ப் பிரயோகஞ் செய்ய முயல்கிறார்கள். இதன் பயனாய் அவர்களிடம் வேலை வாங்க வேண்டிய பொறுப்புள்ள கமிஷனருக்கு மதிப்பு இல்லாமல் போய் நிர்வாகம் ஊழலாவதற்கு இடமேற்படுகிறது. இத்தகைய நிலைமை ஏற்படா திருப்பதற்காகவே இப்பொழுது முனிஸிபல் சட்டத்தை மாற்றத் திருத்த மசோதா ஒன்று அங்கத்தினர்களின் அபிப்பிராயத்துக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவை ஆக்ஷேபித்துத்தான் ஓர் அங்கத்தினர் மேற்கூறியவாறு பயமுறுத்தினாராம்.

நகர மக்களுக்கு ஏதாவது நன்மை செய்யும் விஷயத்தில் கமிஷனரோ, சர்க்காரோ குறுக்கிட்டால் ஆக்ஷேபிக்க வேண்டியதுதான். ஆனால் ஏதோ சில குறிப்பிட்ட காரியாலயச் சிப்பந்திகளின் சம்பளம் முதலிய விஷயங்களில் அங்கத்தினர்கள் அதிகப்படி சிரத்தை காட்ட முயல்வதைப் பற்றிப் பொது மக்கள் பலவிதமாக எண்ணக்கூடும். கமிஷனரிடம் திருப்தி யில்லாவிட்டால், வேலையை விட்டு நீக்கும்படி தீர்மானம் நிறைவேற்றிக் கிளர்ச்சி செய்யலாம். அதை விட்டு, சிப்பந்திகளின் சம்பள விஷயத்தில் தலையிட விரும்புவதும், கேட் வாசலில் நின்று கூச்சல் போடுவேன் என்பதும் ரஸாபாஸமான விஷயமாகும். "இல்லை; நான் கூச்சல்தான் போடுவேன்" என்றால் போடட்டும். கட்டிடத்துக்கு எதிரே டிராம் வண்டிகள் போகும் சப்தத்தினால், அந்த அங்கத்தினர் கத்துவது பிறர் காதில் விழாமல் போகலாம். எனவே அவர் டிராம் சப்தத்தை விடப் பெரிய சப்தம் போடுவதற்காக இப்பொழுது முதற் கொண்டே நிறைய நெய் விட்டுச் சாப்பிட்டுத் தொண்டையைச் சரிப்படுத்திக் கொள்ளட்டும்!

# “ஜின்னாவுக்கு ஜே!”

டில்லியில் கூடிய முஸ்லிம் லீக் மகா சபையில் ஜனாப் ஜின்னா வெகு வெகு ஜோராய்ப் பேசியிருக்கிறார்; ரொம்ப ரொம்ப ஜம்பம் அடித்துக் கொண்டிருக்கிறார். அவருடைய ஜோருக்கும் ஜம்பத்துக்கும் காரணம் நிறைய இருக்கிறது.

மூன்று மைல் நீள ஊர்வலமும், ஐம்பதினாயிரம் ஜனங்களின் ஆரவாரமும் சேர்ந்தால் யாருக்குத்தான் ஜோர் பிறக்காமலிருக்கும்? முன்னெல்லாம், முஸ்லிம் லீக் கூட்டமானது ஒரு சின்னஞ் சிறு மண்டபத்தில் கப்சிப் என்று கூடிக் கலைவது வழக்கம். இப்போதோ காங்கிரஸ் மகா சபையைப் போல் ஒரு தனி நகரமே கட்டுகிறார்கள் லீக் கூடுவதற்கு! ஜம்பம் ஏன் உண்டாகாது?

இரண்டு வருஷத்துக்கு முன்னால் ஒரு மாகாணத்திலாவது முஸ்லிம் லீக் மந்திரி சபை இல்லை. இப்போது நாலு மாகாணங்களில் முஸ்லிம் லீக் மந்திரி சபை நடந்து வருகிறது. அந்த மந்திரிகளையெல்லாம் பார்த்து, “சரியாக நடந்து கொள்கிறீர்களா? மூக்கை அறுக்கட்டுமா?” என்று அதட்டிக் கேட்கும் நிலைமையில் ஜனாப் ஜின்னா இருக்கிறார். ஏன் அவர் தடபுடலாய்ப் பேச மாட்டார்?

இன்னும், மேற்படி முஸ்லிம் லீக் மந்திரி சபைகளிலே ஹிந்துக்களுந்தான் இருக்கிறார்கள். (அதிலும் ‘பாகிஸ்தான்’ என்றால் பதறி விழுந்த ஹிந்துக்கள் வேலை பார்க்கிறார்கள்.) ஏன் ஜனாப் ஜின்னாவுக்குக் குஷி பிறக்காது?

ஜனாப் ஜின்னாவின் பிரசங்கத்தைப் படிக்கும்போது நமக்குக் கூட குஷி பிறக்கிறது; ஜம்பம் ஏற்படுகிறது. “ஆஹா! நம்முடைய காங்கிரஸ் மந்திரிகள் அன்று சட்டைப் பையில் கிடந்து தேள் கொட்டுவது போல் கொட்டிக் கொண்டிருந்த ராஜீனாமாக் கடிதங்களை எடுத்து எறிந்து விட்டு, மளமள வென்று சிறைக்குப் போனதினால்தானே இந்த மாறுதல் ஏற்பட்டிருக்கிறது? மறுபடியும் ஒரு தடவை, கிரிப்ஸ் வந்திருந்தபோது, மாகாண சர்க்கார்களையும் மத்திய சர்க்காரில் முக்காலே அரைக்கால் பங்கையும் கைப்பற்றச் சந்தர்ப்பம் கிடைத்ததே! அதையும் நமது காங்கிரஸ் தலைவர்கள் வேண்டாமென்று தள்ளினார்கள் அல்லவா? என்ன தியாகம்! என்ன தியாகம்! ‘தான் வருந்திப் பிறர்க்குதவும்’ அவர்களுடைய உதார குணத்தினால்தானே இப்போது நாலு மாகாணங்களில் முஸ்லிம் லீக் மந்திரி பதவி வகிக்கிறது! தியாகத்தையும் துன்பத்தையுமே வாழ்க்கை இலட்சியமாகக் கொண்ட நமது தலைவர்களை எவ்விதம் பாராட்டுவோம்?” என்ற குதூகலம் உண்டாகிறது.

இத்தகைய குதூகலத்துடன் ஜனாப் ஜின்னாவின் பிரசங்கத்தை இன்னொரு தடவை படிக்கத் தொடங்குகிறோம். அடாடா! இதென்ன? வெறும் ஜம்பம் மட்டும் இல்லாமல் சோக ரஸங்கூட அல்லவா இதில் காணப்படுகிறது? முஸ்லிம்களின் துயரங்களைக் குறித்து எவ்வளவு கண்ணீர் பெருக்குகிறார்? பிரிட்டிஷாரின் பிரித்தாளும் தந்திரத்தில் ஹிந்து — முஸ்லிம்கள் விழுந்து விட்டதைப் பற்றி எவ்வளவு துக்கப்படுகிறார்? ஹிந்துக்களும் — முஸ்லிம்களும் சுதந்திரம் அடைவதைக் காங்கிரஸ் தலைவர்களும் ஹிந்து தலைவர்களும் தடுத்துக் கொண்டிருப்பதைப் பற்றி எவ்வளவு அபாரமாக வருத்தப் படுகிறார்?

முக்கியமாக, காங்கிரஸ் தலைவர்களைச் சிறையில் அடைத்து அவர்களுடைய இயக்கத்தை ஒடுக்கிய பிறகு லின்லித்கோ — அமெரி கோஷ்டியார் ‘பாகிஸ்தான்’ பல்லவியை மாற்றிக் கொண்டு, ‘இந்தியா ஒரே தேசம்’ என்ற பல்லவியைப் பாடத் தொடங்கியிருப்பது அவருக்கு எவ்வளவு மகத்தான சோகத்தை உண்டாக்கியிருக்கிறது?

ஆமாம்; மேற்படி சோகத்திலிருந்து அவருக்குக் கடுமையான கோபம் உண்டாகியிருப்பதையும் காண்கிறோம். அந்தக் கோபத்தில் மகாத்மா காந்தி சென்ற இருபது வருஷ காலமாய் இந்தியாவில் ஹிந்து ராஜ்யத்தை ஸ்தாபிப்பதற்காகச் செய்து வரும் ‘சூழ்ச்சி’களை எடுத்து விளாசுகிறார்! காங்கிரஸைத் தாக்கு தாக்கு என்று தாக்குகிறார். பிரிட்டிஷ் இராஜ தந்திரிகளையும் வெளு, வெளு என்று வெளுத்துக் கட்டுகிறார்!

சரிதான்; ஜம்பம், சோகம், கோபம் — இவ்வளவுடன் சரியா? அல்லது வருங்காலத்தில் செய்ய வேண்டியதைப் பற்றி ஜனாப் ஜின்னா ஏதாவது உருவான யோசனைகள் சொல்லி யிருக்கிறாரா? இதைத் தெரிந்து கொள்வதற்காக மூன்றாந் தடவையும் நாம் அவருடைய பிரசங்கத்தைப் படிக்க வேண்டியிருக்கிறது. பத்திரிகைக்காரர்கள் வேறு, முன்னும், பின்னும், முதல் நாளும், மறுநாளுமாக அவருடைய பிரசங்கத்தைப் போட்டிருப்பதால் மூன்றாந் தடவை படிப்பது அவசியமாகிறது.

அப்படிப் படிக்கும்போது, ஆம், ஜனாப் ஜின்னா வருங்காலத்தைப் பற்றியும் சில முக்கியமான யோசனைகள் சொல்லித்தான் இருக்கிறார் என்பதைக் காண்கிறோம். அவை வருமாறு:—

1. மகாத்மா காந்தி தமக்குக் கடிதம் எழுதவேண்டும் என்று ஜனாப் ஜின்னா சொல்கிறார். எழுதினால் இரண்டு பேருமாக உட்கார்ந்து ஹிந்து — முஸ்லிம் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்த்து விடலாம் என்கிறார்.

“ஐரோப்பாவிலே எவ்வளவோ பயங்கரமாகச் சண்டை போட்டுக் கொண்டவர்கள் சிநேகிதர்களாகிறார்களே? போனதை மறந்து நாம் ஏன் சிநேகிதர்களாகக் கூடாது?” என்று கேட்டு, ஹிந்து — முஸ்லிம் சமரசத்துக்கும் சிநேகத்துக்கும் தாம் ஆசைப்படுவதைத் தெரிவித்திருக்கிறார்.

2. முஸ்லிம் லீக்கின் சுயநிர்ணய பாத்தியதையை (அதாவது பாகிஸ்தான் உரிமையைக்) காங்கிரஸ் ஒப்புக்கொண்டு சமரசமாகி விட்டால், இரண்டு பேருமாகச் சேர்ந்து பிரிட்டிஷாரை விரட்டியடித்து, இந்தியாவின் சுதந்திரத்தை ஸ்தாபிக்கலாம் என்று சொல்லி யிருக்கிறார்.

3. அப்படிக் காங்கிரஸும் ஹிந்துக்களும் நம் வழிக்கு வராவிட்டாலும் தாம் தனிப்படப் பாகிஸ்தானை ஏற்படுத்திக் கொண்டு, அந்தப் பாகிஸ்தானிலிருந்து பிரிட்டிஷாரை விரட்டியடித்து விடப் போவதாகவும் பறைசாற்றி யிருக்கிறார்.

இந்த விஷயங்களையெல்லாம் இவ்வளவு தெளிவாக ஜனாப் ஜின்னா எடுத்துக் கூறி யிருப்பது மிகவும் திருப்தியான விஷயமாகும்.

முஸ்லிம்களின் சுயநிர்ணய பாத்தியதையைக் குறித்து நமது அபிப்பிராயம் இன்னதென்பதை நேயர்கள் அறிவார்கள். இந்தியாவின் சுதந்திர இயக்கத்தில் சேருவதற்கு நிபந்தனையாகப் பிரிந்து போகும் உரிமையை ஜனாப் ஜின்னா கூறுவது பிசகுதான்; ஆனால் அதைக் காட்டிலும் பெரும் பிசகு அந்த உரிமையை மற்றவர்கள் மறுப்பதாகும். பத்து கோடி முஸ்லிம்கள் பிரிந்து போய்த் தனி ராஜ்யம் நடத்த விரும்பினால் அதைத் தடுக்க நினைப்பது மகா அறிவீனம்; ஒரு பயனுமில்லாமல் தேசத்தில் இரத்த வெள்ளம் ஓடுவதற்கு மார்க்கம். மேற்படி உரிமையை ஒப்புக்கொள்வதற்கு எவ்வளவுக் கெவ்வளவு மறுக்கிறோமோ, அவ்வளவுக்கு தேசத்தின் சுதந்திரம் தள்ளிப் போய்க் கொண்டே யிருக்கும். ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையும் வளர்ந்து கொண்டே யிருக்கும். ஒரு வருஷத்துக்கு முன்னால் அந்த உரிமையை ஒப்புக்கொண்டு சமரசம் ஏற்பட்டிருந்தால், பின்னால் வோட்டு எடுக்கும் காலம் வரும்போது முஸ்லிம்களில் பெரும்பாலோர் “பாகிஸ்தான் வேண்டாம்; சேர்ந்தே வாழ்வோம்” என்று சொல்லி யிருப்பார்கள். அவ்வுரிமையைப் பிடிவாதமாக மறுத்து வந்ததினாலேயே அதில் முஸ்லிம்களுக்குப் பற்று அதிகமாய் ஏற்பட்டிருக்கும்.

மகாத்மாவும் ஜனாப் ஜின்னாவும் சேர்ந்து உட்கார்ந்து சமரசம் பேசுவது மிகவும் அவசியம். ஹிந்து முஸ்லிம் சமரசம் ஏற்பட்டதும் ஏகோபித்த சுதந்திரக் கோரிக்கையை பிரிட்டிஷ் மந்திரி சபைக்கு அனுப்ப வேண்டும். டில்லியிலும் மாகாணங்களிலும் ஜனப் பிரதிநிதிகளைக் கொண்ட தேசிய சர்க்கார்கள் ஏற்பட வேண்டும். இதெல்லாம் மிகவும் முக்கியம்; ரொம்பவும் அவசரம். கிழக்கு அரங்கத்தில் மறுபடியும் யுத்தம் நெருக்கடியாவதற்குள்ளே இதெல்லாம் நடந்தால்தான் நடந்தது. இல்லாவிடில் எது எப்படியாகுமோ தெரியாது.

ஆனால் நம் விருப்பத்தின்படி நடக்குமா என்று கேட்டால், சொல்வதற்கில்லை. ஜனாப் ஜின்னாவின் பிரசங்கத்தை மகாத்மா பார்ப்பாரா? பார்த்தாலும், நம்முடைய சகாக்களைக் கலந்து கொள்ளாமலும் சிறையிலிருந்தபடியும் ஜனாப் ஜின்னாவுக்குக் கடிதம் எழுத விரும்புவாரா? அவர் விரும்பினாலும் பிரிட்டிஷ் சர்க்கார் அநுமதிப்பார்களா? கடிதத்தை அநுமதித்தாலும் மகாத்மாவும் ஜனாப்

ஜின்னாவும் சேர்ந்து பேச விடுவார்களா? அந்தப் பேச்சிலிருந்து சமரசம் ஏற்படுமா? ஏற்பட்டு, ஏகோபித்த சுதந்திரக் கோரிக்கையை பிரிட்டனுக்கு அனுப்புவது சாத்தியமாகுமா?

இவற்றுள் ஒவ்வொன்றும் சந்தேகாஸ்பதமான கேள்வியே யாகும்.

மகாத்மா சிறைக்குள்ளிருந்து கடிதம் எழுதவேண்டுமென்று காத்திராமல் ஜனாப் ஜின்னாவே மகாத்மாவுக்குக் கடிதம் எழுதினாரானால், பிரிட்டிஷ் சர்க்காரின் மனோபாவம் இன்னதென்று உடனே வெளியாகி விடும். ஆனால் சுய கௌரவத்தில் அர்த்தமற்ற அளவு நம்பிக்கையுள்ள ஜனாப் ஜின்னா மகாத்மாவுக்கு முதலில் கடிதம் எழுதுவார் என்று எதிர் பார்ப்பது பகற் கனவுதான்.

ஆகவே, கடைசியில் ஜனாப் ஜின்னா மூன்றாவதாகச் சொன்ன விஷயத்திலே தான் நாம் நம்பிக்கை வைக்க வேண்டியதாயிருக்கிறது. காங்கிரஸையோ ஹிந்துக்களையோ ஜனாப் ஜின்னா எதிர் பார்த்திருக்க வேண்டாம். காங்கிரஸ் தலைவர்கள் சிறையிலேயே தவம் செய்யட்டும். ஹிந்துக்கள் எப்படியாவது திண்டாடட்டும். ஜனாப் ஜின்னா நமது சொந்த வலிமையை — அதாவது முஸ்லிம் சமூகத்தின் பலத்தைக் கொண்டே — பாகிஸ்தான் ஏற்படுத்திக் கொள்வாராக. அப்படி ஏற்படும் முஸ்லிம் ராஜ்யத்திலிருந்து பிரிட்டிஷாரை விரட்டி அடித்துப் பூரண சுதந்திரத்தையும் ஸ்தாபித்துக் கொள்வாராக. அதைப் பார்த்த பிறகாவது ஹிந்துக்களுக்கு ரோஸம் வந்து அவர்களும் பூரண சுதந்திரம் அடையும் மார்க்கத்தைத் தேடட்டுமே?

மேற்கண்ட விதமாக ஜனாப் ஜின்னா தமது சொந்த பலத்தைக்கொண்டு இந்தியாவின் ஒரு சின்ன பாகத்திலாவது பிரிட்டிஷாரைத் துரத்தி யடித்துவிட்டுப் பூரண சுதந்திரத்தை ஸ்தாபித்தாரானால் "ஜனாப் ஜின்னாவுக்கு ஜே!" என்று வானளாவும்படி கோஷிப்பதற்கு நாம் சித்தமா யிருக்கிறோம்.

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: "கண் கண்ட பலன்" என்னும் தலைப்புடன் எழுதிய ஆர். எஸ். வாசன், ஜி. டி. சென்னை.

# கேட்டுப் பாருங்கள்!

"பாடுகிற வரையில் பாடிவிட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு போங்கள்" என்று சொன்ன கதை நேயர்களுக்கு நினைவு இருக்கலாம். நமது "கேட்டுப் பாருங்கள்" பகுதியும் அந்த அளவில்தான் நேயர்களுக்குப் பயன்படுகிறதோ என்று ஒரு சந்தேகம் ஏற்பட்டது. அதற்காகச் சென்ற மாதத்தில் இந்தப் பகுதியை நிறுத்தி வைத்திருந்தோம். பல நேயர்கள் "ஏன் நிறுத்திவிட்டீர்கள்?" என்று கேட்டுள்ளபடியால் மீண்டும் ஆரம்பித்திருக்கிறோம்.

* * *

மே 1உ. சென்னையில் ஸ்ரீமான் அறிவிக்கப்படும் பாடுகிறார். "அறிவிக்கப்படும்" என்பது ரேடியோவில் அரியக்குடியாரின் புனைபெயராக ஏற்பட்டு வருகிறது.

2உ. சென்னையில் ஸ்ரீமதி அபிராமிசுந்தரியின் பிடிலும், எம். டி. பார்த்தசாரதியின் பாட்டும் கேட்கத் தகுந்தவை. திருச்சியில் காயககிகாமணியின் சீடரான ஸ்ரீ என். வி. நாராயணய்யர் முழுக் கச்சேரி செய்கிறார்.

3உ. திருச்சியில் தேசமங்கலம் சுப்பிரமண்ய ஐயரின் வீணை; ஆனால் வாசிப்பில் 'தோஷம்' இராது. 4உ. சென்னையில் மைசூர் சௌடய்யாவும் கண்டதேவி அழகிரிசாமியும் இரட்டை வயலின் கச்சேரி.

5உ. புதன் இரவு 7-45க்குச் சென்னையில் நடைபெறும் விசேஷ நிகழ்ச்சிக்கு "நச்சபி காரியம்" என்று போட்டு நம்மை அச்சுறுத்தி வந்தார்கள். இப்போது "நவீன சங்கீதம்" என்று போட்டிருப்பதால் பயப்படாமல் கேட்டுப் பார்க்கலாம்.

6உ. திருச்சியில் பாகவதர் பாட்டு.

7உ. சென்னையில் ஸ்ரீமதி நீலம்மா கடம்பியின் வீணையும் பாட்டும்.

8உ. சென்னையில் செம்பை கச்சேரி.

9உ. திருச்சியில் பி. வஜ்ரவேலு முதலியார் முழு நேரக் கச்சேரி செய்கிறார்.

10உ. திருச்சியில் பாப்பாவின் பிடில்.



தமிழன்பர்கள் — இசையன்பர்களுக்குள்ளே, "நின்னருள் இயம்பலாகுமோ?" என்னும் பந்துவராளி கீர்த்தனம் பிரசித்தியடைந்திருக்கிறது.

"இன்னல் கூட்டி இன்ப மூட்டி
இந்த்ர ஜால வித்தை காட்டி"

என்ற சரணத்தின் வரிகளைக் கச்சேரியில் நிரவல் செய்யும்போது கட்டாயம் ஒரு கரகோஷம் கிடைத்தே தீருவது வழக்கமாகி விட்டது. — இப்படிப் பிரபலமடைந்த கீர்த்தனத்தை ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் தமது மதுரமான குரலில் (G. H. 6082ம் நம்பர்) இசைத் தட்டில் அருமையாகப் பாடி யிருக்கிறார். இன்னொரு பக்கத்தில் "இனியொரு கணம் உனை மறவேன்" என்னும் ஸ்ரீரஞ்சனி கீர்த்தனம் வெகு அமைப்பாக விழுந்திருக்கிறது. இந்தக் கொலம்பியா இசைத் தட்டைச் சென்னை, ஸரஸ்வதி ஸ்டோர்ஸார் வெளியிட்டுத் தமிழிசை இயக்கத்துக்குச் சிறந்த தொண்டு செய்திருக்கிறார்கள்.

# அக்கப் போர்

"காசி"

பிரிட்டிஷ் சர்க்கார் திராவிட ஸ்தானம் கொடுக்கா விட்டால் தாமும் தமது சகாக்களும் முஸ்லிம்களாகிப் பாகிஸ்தான் கேட்கப் போவதாக திரு ஈ. வே. ராமசாமி நாயக்கர் பயமுறுத்துகிறார்.

இந்தக் கஷ்டமெல்லாம் எதற்கு? வெள்ளைக்காரர்களாகவே மாறிவிட்டால் இந்தியா முழுவதையுமே ஆளலாமே?

* * *

பிரஜைகளைச் சந்தேகத்தின்மீது விசாரணையின்றிச் சிறையிலடைப்பதற்கு அதிகாரம் கொடுக்கும் இந்தியத் தற்காப்புச் சட்டத்தின் 26-வது பிரிவு செல்லுபடியாகாதென்று பெடரல் கோர்ட்டு தீர்ப்புக் கூறியிருக்கிறது.

சட்டம் ஒரு கழுதை என்று சொல்வதுண்டு. அந்தக் கழுதைக்குக்கூட ரோஷம்



வந்து மாக்ஸ்வெல் துரைக்கு ஒரு உதை விட்டதுபோலும். ஆனால் கடைசியில் மாக்ஸ்வெல்லும் பதிலுக்கு அதேமாதிரி உதை கொடுத்து விட்டார். 26-வது பிரிவு செல்லுபடியாகுமென்று இன்னொரு அவசரச் சட்டம் பிறந்திருக்கிறது.

* * *

மேற்படி தீர்ப்புக் கூறிய அதே தினத்தான் ஸர் மாரிஸ் குவையர் பெடரல் கோர்ட் பிரதம நீதிபதி பதவியினின்றும் விலகினார். கடைசி தினமன்று அவர் சர்க்காருக்கு முழு விரோதமாகத் தீர்ப்புக் கூறியது ஏ. பி. ஹெர்பர்ட் என்ற ஹாஸ்ய ஆசிரியர் எழுதிய ஒரு கதையை ஞாபக மூட்டுகிறது.

ஒரு வக்கீல் தொழிலிலிருந்து விலகிக் கொள்ளப் போகிறார். அவர் கடைசியாக வாதம் செய்யும்போது "ஓய் நீதிபதியே! உமக்கு என்ன தெரியும்?... நீர் எங்கள் வாதங்களைக் கேட்பதுபோல் பாசாங்கு செய்துகொண்டு தூங்குகிறீர். இங்கிருக்கும் வக்கீல்கள் எல்லாரும் மூளையற்றவர்கள்" என்ற தோரணையில் வெளுத்து வாரிப் பேசி விட்டுப் போய்விட்டாராம்.

* * *

முன்னெல்லாம் காதலன் தன் காதலிக்குப் புஷ்பங்கள் சன்மானஞ் செய்வது வழக்கம். காலத்தை யொட்டி இந்தச் சன்மானம் அளிப்பதும் மாறுபட்டிருக்கிறது. காசியில் ஓர் ஏ. ஆர். பி. வார்டன் தான் மணக்கவிருந்த ஒரு பெண்ணுக்கு ஒன்றரை மணங்கு கோதுமை சன்மானமாக அளித்தானாம். அவன் கோதுமையைச் சட்ட விரோதமாகப் பெற்றதால் சிறைப்படுத்தப் பட்டிருக்கிறான். வாழ்க்கைச் சிறையிலிருந்து தப்புவதற்காகவே அவன் இப்படிச் செய்தானோ என்னமோ?

* * *

இதுமாதிரி காதலன் உணவுப் பொருள்கள் சன்மானம் கொடுக்கும் வழக்கம் ஏற்பட்டால் இனிமேல் தானியங்களைக் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படாது. அதற்குப் பதிலாகப் புல் கட்டுகளாகக் கொடுத்து விடலாம்.

ஆம்! டாக்டர் குஹா என்ற விஞ்ஞான ஆசிரியர் மிகவும் சிரமப்பட்டு ஆராய்ச்சி செய்து மனிதன் புல்லையும், இலை தழைகளையும் உணவாகக் கொள்ளலாம் என்று கண்டு பிடித்திருக்கிறார். நாம் புல்லை உணவாக ஏற்படுத்திக் கொள்வதில் எவ்வளவோ சௌகரியமிருக்கிறது. காலையிலும் மாலையிலும் உலாவப் போய்விட்டு வழியில் புல்



மேய்ந்து வயிற்றை நிரப்பிக் கொண்டு வரலாம். குடும்ப சகிதமாய்ப் போய்க்கூடக் காற்று வாங்கிக் கொண்டே புல் ஆகாரம் சாப்பிடலாம்.

* * *

மனிதர்கள் புல் மேய ஆரம்பித்து விட்டால் பிறகு அவற்றை இப்பொழுது உணவாகக் கொண்டு வரும் மாடுகள், கர்த்தபங்கள் முதலியன என்ன செய்யும்?

தேசத்தின் ஜனத் தொகையையும், 'மிருகத் தொகை'யையும் கவனித்தால் மனிதர்களை விடப் புல் மேயும் மிருகங்கள் தான் குறைவு என்று தெரிய வரும். ஆகையால் அந்தப்



பிராணிகள் நமக்குப் பதில் நமது உணவைச் சாப்பிடட்டுமே.

* * *

ஜெனரல் மாண்ட் கோமெரி இந்தியத் துருப்புகள் வட ஆபிரிக்காப் போர் முனையில் முன்னணியில் நின்று தீவிர யுத்தம் புரிவதாகக் கூறுகிறார். சர்ச்சில் "இந்தியர்களின் வீரமே வீரம்" என்று தமது கருட்டமுதாறும் வாயால் புகழ்கிறார். "ஆப்பிரிக்காவில் யுத்தஞ் செய்யும் இந்தியர்களின் வீரத்தைப் பற்றி நான் என்னத்தைச் சொல்ல!" என்று அமெரி வர்ணிக்க முடியாமல் திண்டாடுகிறார். இப்படியெல்லாம் புகழ் மாலை பெற்றுக் கொண்டிருப்பதற்காக யுத்த முனைக்குப் போவதை விட்டு டர்பனில் இந்தியர்கள் வீடு வாங்கிக் கொண்டு உட்கார்ந்திருக்க ஆசைப் படுகிறார்களே!' அவர்கள் அதிர்ஷ்டத்தை என்ன சொல்ல!

* * *

"ஹிட்லர் ஒரு பெரிய தவறு செய்து விட்டார். அவர் டன்கர்க்கைப் பிடித்த போது அப்படியே தொடர்ந்து பிரிட்டன் மீது படையெடுத்து இருந்தால் யுத்தத்தின் போக்கே வேறு விதமா யிருந்திருக்கும்" என்று சர்ச்சில் கூறுகிறார். இதே மாதிரி 'இருந்தால்' என்ற சில பிரச்னைகளைத் தந்திருக்கிறேன்:

திரௌபதை துரியோதனன் தடுக்கி விழுந்ததைப் பார்த்துச் சிரிக்காம லிருந்தால்?

சர்ச்சில் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது குளத்தங்கரையில் உட்கார்ந்திருந்த அமெரியின் பின்புறமாய் வந்து அவரைக் குளத்தில் தள்ளிவிடு ரல்லவா? அப்பொழுது அமெரிக்கு நீந்தத் தெரியாம லிருந்தால்?

கிளைவ் துரை லண்டன் தெருக்களில் சாக்கடைகளைத் தேக்கித் தண்ணீரைத் தெருவில் விட்டுக்கொண்டே யிருந்திருந்தால்?

## மத்திய சட்டசபை (உப தேர்தல்)

### சென்னை வாக்காளர்களுக்கு வேண்டுகோள்:—

### சே. ரா. பட்டாபிராமன் எழுதுகிறார்:—

மஹா தேச பக்தராகப் போற்றப் பெற்ற நமது ஸ்ரீ. ஸத்யமூர்த்தி அவர்கள் தமது வாழ்க்கையின் நோக்கம் ஈடேறி பயன் விளையு முன்னம் அகால மரணமடைந்ததால் காலியா யிருக்கிற ஸ்தானத்திற்கு நான் கேஷனலிஸ்டு அபேக்ஷகனாக நிற்கிறேன். எதிர் காலத்து ஸ்வய ஆட்சியுள்ள அரசாங்கங்கள் நேசமாக ஒரே சங்கமாய் வாழும் என்பது திண்ணம். அச்சங்கத்தில் நமது இந்தியாவும் கௌரவம் பெற்ற மெம்பராய் இருக்கு மென்று எனது நிச்சயமான நம்பிக்கை. இவ்வுரிமை பெறுவதற்கு நமது இந்தியா நிஜமான ஸ்வதந்திரமும் வெளிநாட்டிலுள்ள இந்திய மக்களின் நன்மை பெருமைகளை போன்ற உரிமைகளை பாதுகாக்கக் கூடிய திறமையுள்ள ஒன்றுபட்ட அரசாங்கமாகவும் இருக்கவேண்டுமே ஒழிய வேறு மார்க்கமில்லை. ஆகையால் நான் பாகிஸ்தானக் கொள்கையை நிராகரித்து இயன்ற விதங்களிலெல்லாம் எதிர்த்துப் போராடத் தீர்மானித் திருக்கிறேன். எவ்வளவு சீக்கிரமாக முடியுமோ, அவ்வளவு சீக்கிரத்திலேயே இந்த யுத்தம் நடந்து கொண்டிருக்கும்போதே இந்தியாவானது முற்றிலும் சுதேசியான சர்க்காரைப் பெறவேண்டு மென்பது தீர்மானமான என் அபிப்பிராயம். நமது தாய் நாடு நலம் பெற்று விளங்கவேண்டு மென்றால் வெவ்வேறான கட்சிகள் அனைத்தும் ஒன்றோடொன்று கலந்து கொண்டு நீடித்த காலம் ஒற்றுமையோடு வாழ ஒருமுகப்பட வேண்டும். அவ்வாறு ஒருமுகப்பட்டு வாழ்வது என்பது இந்தியாவிலேயே மிகவும் சக்தி வாய்ந்ததும் ஒழுங்கு படுத்தப்பெற்றதுமான மாபெரும் கட்சியாகிய இந்திய நேஷனல் காங்கிரஸின் முயற்சியன்றி இயலாது என்றும் உண்மையாக நான் கருதுகிறேன். அதற்காக மகாத்மா காந்தியையும், சிறையில் அடைப்பட்டு இருக்கும் மற்ற தலைவர்களையும், நிர்வாகிகளையும் உடனேயே யாதொரு நிபந்தனையுமின்றி விடுதலை செய்ய வேண்டு மென்று என் முழுத் திறமையும் கொண்டு வாதாடுவேன்.

# தீரர் சத்தியமூர்த்தி

"கல்கி"

## 3

திருச்சி சிறையில் இருந்தபோது ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு அடிக்கடி சட்டசபை ஞாபகம் வந்துவிடும். அதிகார வர்க்கத்தைச் சேர்ந்த எவராவது அதிகப்பிரசங்கமாய்ப் பேசியதாகப் பத்திரிகையில் வந்தால் ஸ்ரீ சத்தியமூர்த்தி துடியாய்த் துடிப்பார். "இப்போது நான் மட்டும் இந்திய சட்டசபையில் இருந்தால் அவன் மண்டையில் அடித்திருப்பேனே, இல்லையோ?" என்பார். "இதில் இன்னொரு முக்கிய விஷயம் இருக்கிறது, பார்! வெளியில் பேச முடியாத விஷயங்களையெல்லாம் இந்திய சட்டசபையில் தாராளமாய்ச் சொல்லலாம். 'ஆக்ஷன்' எடுத்துக் கொள்ள முடியாது. இதெல்லாம் வல்லபாய் படேலுக்கும் ஜவாஹர்லால் நேருவுக்கும் தெரிந்தால் தானே?" என்பார்.

இந்த உரிமையை — அதாவது வெளியில் பேச முடியாத விஷயங்களைச் சட்டசபையில் பேசக் கூடியதான உரிமையை — ஸ்ரீ சத்தியமூர்த்தி பூரணமாக உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

கிரிமினல் லா அமெண்ட்மெண்ட் மசோதாவின் மீது விவாதம் நடந்துகொண்டிருந்தது. மிஸ்டர் எப். இ. ஜேம்ஸ் (சென்னை ஐரோப்பியர் பிரதிநிதி) சர்க்காரின் கட்சியை ஆதரித்துப் பேசி வந்தார்.

**ஜேம்ஸ்** :—பயங்கர இயக்கத்தைச் சாதாரண சட்டங்களால் அடக்க முடியாது. மசோதாவை எதிர்ப்பவர்கள் வேறு என்ன வழி காட்டுகிறார்கள்?

**சத்திய** :—சுயராஜ்யம்! (கேளுங்கள் கேளுங்கள்.)

**ஜேம்ஸ்** :—கிளிப் பிள்ளையைப் போல் 'சுயராஜ்யம்' என்று கத்துகிறார் கனம் நண்பர். அவர் தென்னிந்தியாவில் செய்த ஒரு பிரசங்கத்தில், 'சுயராஜ்யம் வந்ததும் வானத்திலிருந்து மழை கொட்டும்!' என்றார்.

**சத்தியமூர்த்தி** :— நான் அப்படிச் சொல்லவில்லை. 'சுயராஜ்யம் கிடைத்தால் வானத்திலிருந்து பொழிகிற மழையைக் கடலில் போய் விழுந்து வீணாகும்படி விடமாட்டோம். அணைக் கட்டுப் போட்டுத் தேக்கி விளைச்சலுக்கு உபயோகப் படுத்துவோம்' என்றேன்.

**ஜேம்ஸ்** :—கோடை காலத்தில் இன்னும் எவ்வளவோ என் நண்பர் சொன்னார்.........

**சத்திய** :—நீர் கூடத்தான்.

**ஜேம்ஸ்** :—உலகத்திலேயே சுதந்திரத்தில் அதிகப் பற்றுள்ள தேசம் இங்கிலாந்து தான் ......

**சத்திய** :—எகிப்தையும், அயர்லாந்தையும், அமெரிக்காவையும் கேளுங்கள்!

**ஜேம்ஸ்** :—பின், யார் கீழே இருக்க விரும்புவீர்கள்? ஜெர்மனியின் கீழா? இதாலியின் கீழா?

**சத்திய** :—ஜெர்மனியின் கீழுமில்லை, இதாலியின் கீழுமில்லை, உங்கள் கீழுமில்லை. உங்கள் எல்லாரையும் உதைத்து வெளியேற்றுவோம்! (We will kick you all out!)

மற்றொரு சமயம் ஸர் ஜேம்ஸ் கிரிக்கின் அதிகப் பிரசங்கத்தைப் பற்றி விவாதம் நடந்தது. அப்போது ஸ்ரீ சத்தியமூர்த்தி பின்வருமாறு பேசினார் :—

" அக்கிராசனர் அவர்களே! தெய்வங்கள் யாரை அழிக்க உத்தேசித்திருக்கின்றனவோ, அவர்களை முதலில் பைத்தியம் பிடிக்கச் செய்கின்றன. கனம் வரவு செலவு அங்கத்தினரின் வியாதி இந்திய சர்க்காரின் அழிவுக்கு அறிகுறியாகும். தங்களுக்கு முடிவு நெருங்கிவிட்டதென்று அவர்களுக்கே தெரியும். அதனால்தான் இப்படிப் பேசுகிறார்கள்!"

பின்னால் ஸர் ஜேம்ஸ் கிரிக் குறுக்கிட்டபோது ஸ்ரீ சத்தியமூர்த்தி சொன்னார் :—

"பொறுங்கள். நீங்கள் அழியப்போகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். ஐரிஷ்காரன் ஒருவன் 'நான் அப்படித்தான் தண்ணீரில் முழுகிச் சாவேன்; என்னை ஒரு பயலும் எடுக்கக்கூடாது!' என்றானாம். அப்படித்தான் உங்களுக்கும் நேரப்போகிறது!"

அதிகார வர்க்க ஆட்சிக்கு ஸ்ரீ சத்தியமூர்த்தி கொடுத்த சாபம் எப்போது சத்தியமாகப் போகிறதோ, தெரியவில்லை.

* * *

சட்ட சபையில் மட்டுமல்ல, காங்கிரஸ் கூட்டங்களிலேயும் ஸ்ரீ சத்தியமூர்த்தியின்

வாக்கு பாணங்கள் அடிக்கடி கிளம்பும். 1939-ல் நாகபுரியில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நடந்தது. பண்டித ஜவாஹர்லால் நேரு பேசிக் கொண்டிருந்தார்.

காங்கிரஸ் கூட்டங்களில் நேருஜி பேசும் போது குறுக்கிடுவதற்கு யாருமே பயப்படுவார்கள். அவ்வளவு முன் கோபக்காரர். அதிலும் அவர் சர்வ தேசிய விஷயங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டால் கேட்க வேண்டியதில்லை. மகாத்மா காந்தியே "சர்வ தேசிய விஷயங்களில் ஜவாஹர்லால்ஜி வைத்ததுதான் எனக்குச் சட்டம்" என்று சொல்லி யிருக்கிறார்.

அப்பேர்ப்பட்ட ஜவாஹர்லால்ஜி மேற்படி கூட்டத்தில் சர்வ தேசிய விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோது பின்வரும் சின்ன வாக்கு யுத்தம் நடந்தது.

**ஜவாஹர்** :—இந்தியாவை ருஷியா தாக்கும் என்ற பயத்துக்கு ஆதாரமே யிருக்க முடியாது.

**சத்திய** :—ஏன் முடியாது?

**ஜவாஹர்** :—சர்வ தேசிய நிலைமையைப் பற்றி என்னுடைய ஆராய்ச்சியிலிருந்து அது தெரிகிறது.

**சத்திய** :—வேறு காரணம் ஏதாவது?

இந்தக் கேட்ட பண்டிதஜி திகைத்துப் போனார். சற்று நிதானித்துவிட்டு, "உங்களிடம் பிறகு தனியாகப் பேசி விஷயத்தை விளக்குகிறேன்" என்று சொல்லி மேலே பேசத் தொடங்கினார்.

வடநாட்டுத் தலைவர்களைத் தமிழ் நாட்டார் அளவுக்கு மீறித் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடுவது ஸ்ரீ சத்திய மூர்த்திக்குப் பிடிப்பதில்லை. முக்கியமாக வட நாட்டுக்கு அவர் ஒரு தடவை போய்த் திரும்பியவுடன் அவரைப் பார்த்தால், இதைப் பற்றி அதிகமாகப் பேசுவார். "வடக்கே யிருந்து ஒருவர் வந்து விட்டால் நாம் என்ன பாடு படுத்துகிறோம்? நாம் அங்கே போனால் ஒருத்தனும் கவனிக்கிறதில்லை. நீ சொல்கிறது ரொம்ப சரி. நம்மை நாமே மதித்தால் தானே பிறத்தியானும் மதிப்பான்?" என்பார்.

"நீ சொல்கிறது ரொம்ப சரி" என்று அவர் குறிப்பிடுவது எதைப்பற்றி என்றால் :—

ராஜாஜியை நான் அளவு மீறி ஸ்தோத்திரம் செய்கிறேன் என்ற அபிப்பிராயம் ஸ்ரீ சத்திய மூர்த்திக்குக் கொஞ்சம் உண்டு. சில சமயம் என்னைப் பார்த்ததும், "என் அப்பா! இந்திரன், சந்திரன், பிரம்மா, விஷ்ணு எல்லாரும் இராஜகோபாலாச்சாரியார் தானோ? இருந்தாலும் இவ்வளவு ஹீரோ ஒர்ஷிப் (வீர பூஜை) கூடாது!" என்பார். "ஆகட்டும், ஆகட்டும். உங்களையும் இந்திரன், சந்திரன், பிரம்மா, விஷ்ணு என்று ஒரு சமயம் சொல்லப் போகிறேன். அப்போது என்ன செய்வீர்களோ, பார்க்கலாம்!" என்பேன்.

அவருடன் அவகாசமாகப் பேச நேர்ந்தால், "நீங்கள் தான் வடநாட்டுத் தலைவர்களுடன் பழகியிருக்கிறீர்களே? அவர்களை அந்தந்த மாகாணத்தார் எவ்விதம் போற்றுகிறார்கள்? நமது தலைவர் அவர்களைக் காட்டிலும் எந்த விதத்தில் குறைந்தவர்? தென்னாட்டில் நமது ராஜாஜியைப்போல் அறிவாற்றலுள்ள ஒரு பெரியவர் இக்காலத்தில் தோன்றி யிருப்பது நமது அதிர்ஷ்டமல்லவா? அவரை நாம் கொண்டாடாவிட்டால் வடநாட்டார் நம்மை எவ்விதம் மதிப்பார்கள்?" என்பேன். இந்த விஷயம் சம்பந்தமாகத்தான் ஸ்ரீ சத்திய மூர்த்தி வடநாட்டிலிருந்து திரும்பி வந்ததும் "நீ சொல்கிறது ரொம்ப சரி" என்று சில சமயம் சொல்வது வழக்கம்.

* * *

ஸ்ரீ சத்தியமூர்த்திக்கும் ராஜாஜிக்கும் இருந்த சம்பந்தத்தைப் பற்றிச் சிலருக்குத் தவறான அபிப்பிராயம் இருந்து வருவதாய்த் தெரிகிறது. முக்கியமாக, காங்கிரஸ் விரோதிகளும் தேசத்துக்காக ஒரு துரும்பைக் கூட எடுத்துப் போடாதவர்களும் மேற்படி தவறான அபிப்பிராயத்தைப் பரப்பி வருகிறார்கள். ஸ்ரீ சத்தியமூர்த்தியின் மரணத்தைக் குறித்து புதுதாபப்பட்ட ஒரு பெரிய மனிதர் அவருக்கு மந்திரி உத்தியோகம் கிடைக்காதது பற்றி ஒரு குடம் கண்ணீர் வடித்தார்!

இவர்களுக்கெல்லாம் மந்திரி உத்தியோகம் என்றால், அதிலுள்ள சம்பளம், அதிகாரம், இதர சௌகரியங்கள் இவை மேலேதான் ஞாபகம். காங்கிரஸ் மந்திரி பதவி வகிப்பதும் சுதேச சமஸ்தானத்தில் திவான் வேலை பார்ப்பதும் ஒன்று என்பது இவர்களுடைய எண்ணம். சுதேச சமஸ்தானத்தில் திவானாயிருந்தால் ஒரு மகாராஜாவுக்கும் ஒரு ரிஸிடெண்டுக்கும் நல்ல பிள்ளையாய் நடந்து கொண்டால் போதும். மற்றப்படி பெரும்பாலும் திவான்மார்கள் "வைத்தால் குடுமி—சிரைத்தால் மொட்டை" என்ற ரீதியில் ஆட்சி செலுத்தலாம்.

காங்கிரஸ்காரர்கள் மந்திரி வேலை பார்த்தது இப்படியல்ல. காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவியை ஆசைப்பட வேண்டிய ஒரு பதவி

யாகவோ பரிசாகவோ கருதவில்லை; அதை ஒரு கடினமான பொறுப்பாகவே நினைத்தார்கள். பொதுஜனத்தின் யஜமானர்களாக அவர்கள் தங்களை நினைக்கவில்லை; பொது ஜனத்தின் ஊழியர்களாகவே நினைத்துக் கொண்டார்கள்.

ஆகையினால்தான், ஸ்ரீ சத்தியமூர்த்தி ராஜாஜியைச் சென்னைச் சட்ட சபைக்கு நிற்கும்படியும், பிரதம மந்திரி வேலையை ஒப்புக் கொள்ளும்படியும் வற்புறுத்தினார். அவர் இவ்விதம் வற்புறுத்திய ஒரு சந்தர்ப்பத்தில் நான் அருகில் இருக்க நேர்ந்தபடியால் இதைத் திட்டமாய்ச் சொல்கிறேன். தமக்குச் சேரவேண்டிய ஒரு பரிசை ராஜாஜி கொண்டு போக வந்து விட்டார் என்ற எண்ணம் அவர் மனதில் கொஞ்சமாவது அச்சமயம் இல்லையென்பது நிச்சயம். அப்படியிருந்தால் அவரும் வற்புறுத்தியிருக்க மாட்டார்; ராஜாஜியும் ஒப்புக்கொண்டிருக்கமாட்டார்.

இந்தச் சென்னை மாகாணத்தில் தமிழ் — ஆந்திரா — மலையாளத் தகராறுகள், பிராமணர் — பிராமணரல்லாதார் தகராறுகள், — இப்படியாக மற்ற மாகாணங்களில் இல்லாத தகராறுகள் பல உண்டு; காங்கிரஸுக்குள்ளும் உண்டு. இந்தத் தகராறுகளையெல்லாம் கூடிய வரையில் தீர்த்து எல்லாரையும் சரிக்கட்டித் திறமையாக ஆட்சி நடத்துவதற்கு ராஜாஜி தான் எல்லா விதத்திலும் தகுந்தவர் என்று காங்கிரஸ்வாதிகள் அநேகர் கருதியதுபோல் தான் ஸ்ரீ சத்தியமூர்த்தியும் அப்போது நம்பினார். அது எவ்வளவு உண்மையென்பது பின்னால் நன்கு விளங்கிற்று. ராஜாஜி விலகிய பின்னர் கூடிய காங்கிரஸ் சட்ட சபை அங்கத்தினர் கூட்டத்தில் ராஜாஜிக்குப் பதிலாக ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்க முடியாமல் ஒத்தி வைத்ததிலிருந்து மேற்படி உண்மை இன்னும் ஸ்பஷ்டமாயிற்று.

ராஜாஜியைப் பொறுத்த வரையில், ஸ்ரீ சத்தியமூர்த்தியினிடம் அவருடைய அபிமானம் — பல அரசியல் விவாதங்களையெல்லாம் மீறி — ஒரே விதமாயிருந்தது என்பதை நான் அறிவேன். சிறையிலும் வெளியிலும் இதை நான் கண்டிருக்கிறேன். சிறையில் ஸ்ரீ சத்தியமூர்த்தி படும் கஷ்டங்களைக் குறித்து யாராவது அநுதாபமின்றிப் பேசினால் உடனே ராஜாஜி கண்டிப்பார்.

ஒரு தடவை மாகாணக் கமிட்டிக்கு ஸ்ரீ சத்தியமூர்த்தியைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று ராஜாஜி வற்புறுத்தியதனால் காங்கிரஸ் தொண்டர்கள் பலருடைய அதிருப்திக்கு ஆளானதை நான் அறிவேன்.

ஸ்ரீ சத்தியமூர்த்தியைச் சில சமயம் நான் கடுமையாகத் தாக்கவேண்டி நேர்ந்திருக்கிறது. (எழுத்திலேதான்!) அப்போதெல்லாம் ராஜாஜி தமது ஆட்சேபத்தைத் தெரிவிக்காமல் இருப்பது கிடையாது. கடைசியில், ஸ்ரீ சத்தியமூர்த்தி ஜெனரல் ஆஸ்பத்திரியில் நோய்ப் படுக்கையில் இருந்தபோது அவரைப் போய் நான் தரிசிக்கும்படி நேர்ந்ததும் ராஜாஜியின் மூலமாகத்தான். அப்போது அவருடைய உடல் நிலை கவலைக் கிடமாகவே இருந்தாயினும் இவ்வளவு சீக்கிரத்தில் இறுதி நேருமென்று எதிர்பார்க்கப் படவில்லை. எதிர்பார்த்திருந்தால் ஒருவேளை ராஜாஜி தமது வடநாட்டுப் பிரயாணத்தைக் கூட நிறுத்தி வைத்து அவருடைய நோய்ப் படுக்கையின் அருகில் இருந்திருப்பார்.

* * *

ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஆப்த நண்பர்களில் ஒருவரான தங்கம்பாக்கம் ஸ்ரீ துரைசாமி ஐயர் அன்று மயானத்தில் துயரம் ததும்பப் பேசியபோது, "ஏ சத்தியமூர்த்தி! இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னால் நீயும் நானும் ரிக்ஷாவில் போய்க் காங்கிரஸ் தொண்டு செய்தோமே? அதை எப்படி மறப்பேன்!" என்று கதறினார். எனக்கு அவ்வளவு நீண்ட காலப் பழக்கம் ஸ்ரீ சத்தியமூர்த்தியுடன் கிடையாது. சுமார் பதினைந்து வருஷத்துக்கு முன்னாலேதான் அவருடன் அறிமுகம் ஏற்பட்டது. அது எப்படி என்றால்:—

திருவண்ணாமலையிலோ காஞ்சிபுரத்திலோ நடந்த மாகாண மகாநாட்டுக்கு அடுத்த நாள் மாகாணக் காங்கிரஸ் கமிட்டி கூடிற்று. அந்தக் காலத்தில் காங்கிரஸ் சம்பந்தமான எந்தக் கூட்டம் கூடினாலும் தேசிய கீதம் பாடாமல் ஆரம்பிப்பது கிடையாது. மேற்படி கூட்டத்தில் தேசிய கீதம் பாடுவதற்கு ஒருவரும் இல்லை. ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை கூட எங்கேயோ போய்விட்டார். யாரோ ஒருவர் எனக்குப் பாடத் தெரியும் என்று சொல்லி விடவே, "பாடு!" "பாடு!" என்று நாலா புறத்திலிருந்தும் ஆக்ஞை வந்தது. நான் எவ்வளவு தடுத்துச் சொல்லியும் கேட்கவில்லை. "சரி, பாடித்தான் இவர்களைத் தண்டிக்க வேண்டும்!" என்று தீர்மானித்து ஒரு பாரதி பாட்டைப் பாடி வைத்தேன். பாட்டு முடிந்ததும் ஸ்ரீ சத்தியமூர்த்தி என்னை அருகில் அழைத்து, "பாட்டு நன்றாய்த்தானிருந்தது; ஆனால் சுருதியோடு சேரவில்லை" என்றார். அதற்கு நான், "அடாடா! அது எனக்கு மட்டுந்தான் தெரியும் என்று நினைத்தேன்,

தங்களுக்கும் தெரிந்திருக்கிறதே!" என்றேன். ஸ்ரீ சத்தியமூர்த்தி சிரித்தார்.

இப்படி எங்களுக்குள் ஏற்பட்ட பழக்கம் சங்கீதம் மூலமாகவே அதிகம் வளர்ந்து வந்தது. சென்னையில் எந்த சங்கீதக் கச்சேரியில் என்னை அவர் கண்டாலும், எழுந்து போகும்போது, "சுத்த மட்டம்" "பாட்டு தேவலே; பக்க வாத்தியம் மோசம்" "கச்சேரி முதல் தரம்" என்று இப்படி ஏதாவது ஒரு அபிப்பிராயம் சொல்லாமல் போக மாட்டார். அரசியலைக் காட்டிலும் சங்கீதம் முதலிய கலைத் துறைகளில் எங்களுடைய அபிப்பிராயம் அதிகமாக ஒத்திருந்தது.

யாராவது ஒருவரையே பிடித்துக்கொண்டு "அவர் பாட்டுத்தான் ஒசத்தி; மற்றதெல்லாம் பாட்டேயில்லே" என்று சொல்லும் ரஸிகர் கூட்டத்தை ஸ்ரீ சத்தியமூர்த்தி சேர்ந்தவர் அல்ல. யாருடைய பாட்டில் என்ன நல்ல அம்சம் இருக்கிறதோ அதை அநுபவித்து மகிழ்வார். எந்தெந்த சமயத்தில் யார் நன்றாய்ப் பாடுகிறார்களோ, அவர்களை மதித்துப் பாராட்டுவார்.

ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னால் ஒரு தடவை மியூஸிக் அகாடமியின் ஆதரவில், லிங்க செட்டித் தெருவில் இருந்த அகாடமி ஆபீஸ் மாடியில், ஒரு இளம் வித்வானின் கச்சேரி நடந்தது. கச்சேரி முடிவில் ஸ்ரீ சத்தியமூர்த்தியைப் பேசச் சொன்னார்கள். எங்கே, எந்த சந்தர்ப்பத்தில், எதைப் பற்றிப் பேசச் சொன்னாலும் அழகாய்ப் பேசும் சக்தி வாய்ந்த ஸ்ரீ சத்தியமூர்த்தி வெண்கலக் கடையில் யானை புகுந்தாற்போல் ஜம்மென்று பேசினார். "இந்தப் பாடகர் தெலுங்குப் பாட்டுக்களைப் பாடி வந்தபோது எவ்வளவு அலுப்பாயிருந்தது? தமிழ்ப் பாட்டுப் பாடியதும் சபையில் எவ்வளவு கலகலப்பு உண்டாயிற்று? எத்தனை பேருக்கு அர்த்தம்



★ தலைவர் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஏக புத்திரி சௌ. சுப்புலக்ஷ்மியின் திருமணம், ஏப்ரல் 23உ யன்று, தந்தை குறிப்பிட்டிருந்த முகூர்த்தத்தில் சிறப்பாக நடைபெற்றது. மணமகன் கோட்டயம் ஸ்ரீ கிருஷ்ணையர் குமாரன் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ.

★ முகூர்த்தத்தின்போது ராஜாஜி, மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் முதலிய பல பிரமுகர்களும் நண்பர்களும் வந்திருந்து தம்பதிகளை ஆசீர்வதித்தார்கள்.

★ ஸ்ரீ சத்தியமூர்த்தி தெரிவித்திருந்த விருப்பத்தின்படி அன்று மாலையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசை விருந்து நடைபெற்றது.

★ ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார், ஸ்ரீ டி. ஆர். வேங்கடராம சாஸ்திரியார், ஸர் எம். வேங்கட சுப்பராவ் முதலிய பிரமுகர்களுடன் பொதுஜனங்களும் ஆயிரக் கணக்கில் மாலை வைபவத்துக்கு விஜயம் செய்திருந்தார்கள்.

★ ஸ்ரீ சத்தியமூர்த்தி சூக்ஷ்ம சரீரத்தில் வந்திருந்து இந்த வைபவத்தையெல்லாம் கண்டு மகிழ்ந்திருப்பார் என்ற எண்ணம் ஒவ்வொருவருடைய மனதிலும் குடிகொண்டிருந்தது.

தெரியாத பாஷையிலேயே நமது வித்வான்கள் பாடிக்கொண்டிருக்கப்போகிறார்கள்? — தமிழிலே திவ்யமான கீர்த்தனங்கள் இல்லையா?" என்று கேட்டு விட்டு, "இங்கே 'கல்கி'யும், டி. கே. சிதம்பரநாத முதலியாரும் இருப்பதற்காக நான் இவ்விதம் பேசவில்லை! உண்மையாக என் அபிப்பிராயம் இதுதான்!" என்றார்.

அப்போதெல்லாம் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் தமிழிசை இயக்கத்தை ஆரம்பித்திருக்கவில்லை. டி. கே. ஸி.யும் நானும்தான் அடிக்கடி "தமிழ்ப் பாட்டு" என்று சொல்லிக் கொண்டிருந்தோம். ஆகையினால்தான் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவ்விதம் எங்களைக் குறிப்பிட்டார். அவர் பேசிவிட்டு வந்து ஆசனத்தில் அமர்ந்ததும், "எங்களை நீங்கள் குறிப்பிட்டிருக்கவே வேண்டியதில்லை. மகாத்மா காந்திக்காகவே நீங்கள் உங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள மாட்டீர்களே? எங்களுக்காக மாற்றிக்கொள்வீர்களா?" என்றேன். பக்கத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்தவர்களும் என்னை ஆமோதித்தார்கள்.

கடைசிவரையில் ஸ்ரீ சத்தியமூர்த்தி இதே அபிப்பிராயந்தான் கொண்டிருந்தார். ஸ்ரீ தியாகராஜ உற்சவக் கச்சேரிகளின் ஆரம்ப தினத்தில் அவர் பேசியபோதுகூட தமிழ் இசை இயக்கத்தை ஆதரித்தார். "தியாகராஜ ஸ்வாமிகள் தமிழ் நாட்டைத்தான் சேர்ந்தவர்; அவரை நான் போற்றுகிறேன். ஆனாலும், தமிழ்ப் பாட்டைத்தான் என்னால் நன்றாக அநுபவிக்க முடிகிறது. ஸ்ரீ 'திருவடி சரணம்' பாடும்போது என் உள்ளம் உருகுவதுபோல் தெலுங்குப் பாட்டைக் கேட்கும்போது உருக வில்லை" என்றார்.

ஸ்ரீ சத்தியமூர்த்தியைப் பற்றிய இன்னொரு தப்பபிப்பிராயம் பலருடைய மனதில் உண்டு என்பதை அறிவேன். அது, அவர் சாதிப்பற்று உள்ளவர் என்பதுதான். உண்மையில், அவர் மதப்பற்று உள்ளவர்; மதத்தின் வெளிச் சின்னங்களிலே கூட அவருக்கு நம்பிக்கை உண்டு. யாராவது ஒரு பெண் குழந்தை நெற்றிக்கு இட்டுக் கொள்ளாமல் இருப்பதைப் பார்த்தால், "என், அம்மா, பாழும் நெற்றியுடன் இருக்கிறாய்? குங்குமம் இட்டுக் கொண்டு வா!" என்பார்.

ஊரில் இருக்கும் நாட்களில் அவர் காலையில் எழுந்ததும் ஸ்நானம் செய்து வெண்பட்டு உடுத்தி, விபூதியும் கீற்றுச் சந்தனமும் தரித்து, ஸ்ரீ ராம பட்டாபிஷேக படத்தின் முன்னால் உட்கார்ந்து, வால்மீகி ராமாயண பாராயணம் செய்வதை நான் பலமுறை பார்த்திருக்கிறேன்.

அவருடைய மத பக்தியையும், பழமைப் பற்றையும் பார்த்துவிட்டுத்தான் பலர் அவர் சாதிப் பற்று உள்ளவர் என்று தவறாக எண்ணினார்கள். உண்மையில், அவர் சாதிப் பற்று உள்ளவரா யிருந்தால், ஸ்ரீ காமராஜ், ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை போன்ற பல நண்பர்களின் நீடித்த நட்புக்கு உரியவராயிருந்திருக்க முடியாது.

* * *

ஸ்ரீ சத்தியமூர்த்தியின் மரணத்தினால் சென்னை மாகாணத்தின் பொது வாழ்வில் ஒரு பெரிய சூன்யம் ஏற்பட்டிருக்கிறது. நாம் ஒவ்வொருவரும் சொந்த வாழ்க்கையில் ஒரு பெரிய நஷ்டத்தை அடைந்திருக்கிறோம்.

சென்ற இருபத்தைந்து வருஷமாக ஸ்ரீ சத்தியமூர்த்தி நம் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் கலந்து போயிருந்தார். அவர் நம ஊருக்கு வருகிறார் என்றால் அதில் ஒரு குதூகலம்; அவர் பொதுக் கூட்டத்தில் பேசுகிறார் என்றால், அதைக் கேட்கப் போவதில் ஒரு உற்சாகம்; அவருடைய பேச்சைக் கேட்பதில் மகத்தான ஆனந்தம்; பிறகு அதைப் பற்றி நாம் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதில் எவ்வளவோ திருப்தி. சட்டசபையிலோ, பொதுக் கூட்டத்திலோ, அவர் பேசியது பத்திரிகையில் வந்திருக்கிறதென்றால் அன்று பத்திரிகையைப் பிரிக்கும்போதே ஆர்வம். "சத்தியமூர்த்தி வெளுத்திருக்கிறார், பார்த்தீரா?" என்று நண்பர்களைக் கேட்பதிலே மகிழ்ச்சி. — இப்படியெல்லாம் ஸ்ரீ சத்தியமூர்த்தி நமது தினசரி வாழ்க்கையில் இடம் பெற்றிருந்தார். அந்த இடம் இப்போது சூன்யமாயிருக்கிறது.

காலம் இப்படியே இருந்துவிடாது. மறுபடியும் திருவல்லிக்கேணி கடற்கரையிலோ காங்கிரஸ் மைதானத்திலோ, தேசிய பொதுக் கூட்டங்கள் நடக்கும் நாட்கள் வரலாம். அப்போதெல்லாம் நமக்கு "ஸ்ரீ சத்தியமூர்த்தி இல்லையே?" என்ற எண்ணம் தோன்றும்; வயிறு பகீர் என்னும்.

ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு ஞாபகச் சின்னம் ஏதாவது ஏற்படுமோ, என்னமோ தெரியாது. ஆனால் ஞாபகச் சின்னம் ஏதுவும் இல்லாவிட்டாலும் அவருடைய ஞாபகம் மட்டும் நமக்கு இருக்கத்தான் செய்யும். ஸ்ரீ சத்தியமூர்த்தி போன வழியை நாமும் பின்பற்றும் காலம் வரும் வரையில் நமக்கு அவருடைய ஞாபகம் இல்லாமற் போகாது.

முற்றும்



# பூந்தோட்டம்

ஆசிரியர்
ரவீந்திர நாத் டாகுர்
மொழிபெயர்ப்பு
த. நா. குமாரஸ்வாமி



## ஐந்தாம் அத்தியாயம்

"இந்தப் 'போட்டோ' யாருடையது, தெரிகிறதா?" என்றான்.

"என்னுடையதுதான்" என்றாள் ஸரளா.

"உன் சிறுவயதில் எடுத்த படம். அப்போது உன் பெரிய தந்தையும் நீயும் சேர்ந்து தோட்ட வேலையில் ஈடுபட்டிருந்தீர்களே கவனம் இருக்கிறதா? படத்திலுள்ள உருவத்தைப் பார்த்தால் கிட்டத்தட்ட பதினாறு வயது இருக்குமென்று தோன்றுகிறது. மராட்டி மங்கையரைப்போல் பின்கச்சம் வைத்துச் சேலை கட்டிக் கொண்டிருக்கிறாய்."

"இது, உனக்கு எங்கே அகப்பட்டது?"

"அவர் டெஸ்கில் கிடந்தது ...... முதலில் நான் அதைச் சரியாக கவனிக்கவில்லை. இன்று அதை அங்கிருந்து எடுத்து வந்தேன், ரமேன்! முன் இருந்ததைவிட ஸரளா இப்போது என் கண்ணுக்கு இன்னும் அழகாய்த் தோன்றுகிறாள். இல்லையா? அப்போது அவள் எப்படியிருந்தாளென்று ஞாபகமிருக்கிறதா?"

"அப்போது ஸரளா யாரோ, எங்கிருந்தாளோ? எனக்கு அவளைப்பற்றி ஒன்றுமே தெரியாது. இப்போது இங்கே நிற்கும் ஸரளாதான் என் வரைக்கும் உண்மை. அவளை நான் எதோடு ஒப்பிடுவது? தெரியவில்லையே" என்றான் ரமேன்.

ஸரளா போக யத்தனம் செய்தாள். நீரஜா அவளைக் கூப்பிட்டு, "ஸரளா, சற்று உட்கார். ரமேன்! இவளைச் சற்றுப் பார். எல்லாவற்றையும் விட இவளுடைய கரு விழிதானே முன்னால் கவனத்தைக் கவருகிறது?" என்றாள்.

"இல்லை, ஒரே சமயத்தில் அவளுடைய எல்லா அவயவங்களுமே என்னைக் கவர்கின்றன."

"வாஸ்தவமாக அந்தக் கண்கள்தான் ...... அந்த மாதிரி உருக்கமாக அவளுக்குத்தான் வைத்துக் கொள்ளத் தெரியும். இவளுடைய உடலின் ஒவ்வொரு வளைவிலுமுள்ள வனப்பைப் பார்."

"என் மன்னி, பாவம், அவளை வலைக்கு விடுகிறாயா என்ன?"

நீரஜா, ஒரு நாகனுக்குரிய உவப்புடன் "ரமேன், ஸரளாவின் கைகளை நன்றாகக் கவனி. வலுவாயிருந்தாலும், திரண்டு அழகாக, கண்களுக்கு மென்மையாகத் தோன்றவில்லையா? இந்த மாதிரிக் கைகளைப் பார்த்தே இருக்க மாட்டாய்."

ரமேன் சிரித்துவிட்டு, "நான் பார்த்திருக்கிறேன், இல்லை என்பதை அவள் எதிரே சொல்வது நன்றாக இராது" என்றான்.

"இப்படிப்பட்ட அழகான கையைப் பற்றிச் சொன்ன உனக்கு விருப்பமில்லையா?"

"நிரந்தரமாக விரும்பியதில்லை. நடுநடுவே விரும்பியது உண்டு. உங்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம், டீயைக் காட்டிலும், அதை வழங்கும் கைகளுக்கே அதிக வசீகரம் இருப்பதைக் கவனித்திருக்கிறேன்."

ஸரளா, பிரம்பு நாற்காலியை விட்டு எழுந்தாள். அறையிலிருந்து வெளியேறப் பிரயத்தனம் செய்கையில் ரமேன் அவளை வழி மறித்து, "உன்னை ஒன்று யாசிக்கிறேன். கையடித்துக் கொடுத்தால்தான் உன்னை விடுவேன்" என்றான்.

"என்ன சொல்லு."

"இன்று சுக்லபக்ஷ சதுர்த்தசி. இந்த ஏழைக்கு உன் பூந்தோட்டத்தில் இடம் இல்லையா? உறுதி கொடுத்தால் அதற்கு மேல் வாய்ச் சொற்களுக்குப் பயனே இராது. இன்று அகாலத்தில் உன்னைச் சந்திக்க நேரிட்டது.

மனமாறப் பார்க்க வேண்டாமா உன்னை? இந்த இடத்தில் உன்னைக் கண்டது, எனக்கு நீ கொடுத்த பிடியளவு பிச்சை யெனலாம். ஆனால் இது போதாது. உனது குளிர்ந்த மர நிழலில் என் உள்ளத்தைச் சற்று தாராளமாக நிரப்பிக்கொள்ள ஆசைப்படுகிறேன்."

லரனா, "அதற்கென்ன, நீ வா" என்றான்.

ரமேன் கட்டிலின் அருகில் சென்று, "உத்தரவா, மன்னி? போய் வருகிறேன்" என்றான்.

"இனிமேல் இந்த இடத்தில் நீ என் நிற்கப் போகிறாய்? உன் காரியம் ஆகி விட்டது" என்றாள் நீரஜா.

ரமேன் போய்விட்டான்.

## ஆறாம் அத்தியாயம்

ரமேன் அகன்றதும், நீரஜா, உள்ளங் கையால் முகத்தை மறைத்துக் கொண்டு, படுக்கையில் சாய்ந்து எண்ணமிடலானாள்.



பழைய ஞாபகங்கள் ஒவ்வொன்றாக மனத்துள் முளைக்க இடம் கொடுத்தாள் நீரஜா.

"எத்தனையோ நாள், என் கூந்தலை நீவி என்னைத் தம் மார்போடு தழுவி 'என் அந்தரங்கத்தில் நடனமிடும் தேவியே!' என்று அவர் காதலினால் உருகிச் சொன்னதுண்டு. இந்தப் பத்து வருஷத்திற்குள் அத்தகைய நட்பின் வர்ண சித்திரம் அழிந்து போகக் கூடியதா என்ன? உள்ளம் நிரம்பித்தானே இருக்கிறது. அடிக்கடி கேளிரஸமாக அவர் இவ்வாறு கூறியதில்லையா? — 'முன் காலத்தில் காதல் மடக்கையரின் செஞ்சீரடிகள் பட்ட மாத்திரம் அசோக விருக்ஷங்கள் அரும்பெடுத்து அளவற்றுப் பூத்தனவாம். அவர்கள் இதழின் அமுதூறல் சிந்தியபோது மகிழ மரங்கள் நறுமலரைச் சொரிந்தனவாம். காளிதாஸனுடைய காவிய லோகத்தை நம் பூஞ்சோலையிலேயே காணுவோம் வா. உனது அழகிய பாதம் பட்ட இடமெல்லாம் இருமருங்கும் வண்ண மலர்கள் கண் திறக்கின்றன பார். மயக்கத்தைத் தருகிறது இளந்தென்றல். ரோஜா மலர் வனத்தில் அதன் சஞ்சலம் பரவுகிறது' என்று இப்படியெல்லாம் சொல்வார். இன்னும் வார்த்தைக்கு வார்த்தை 'நீ இராது போனால் பூப்போன்ற என்னுடைய இந்த ஸ்வர்க்க வாஸத்தை விருத்திராஸுரனை ஒத்த ஒரு மார்வாடி அல்லவோ இத்தனை நாளைக்குள் சீர்குலைத் திருப்பான்?' என்று என்னை ஸ்துதி செய்வாரே! ஐயோ! என் இளமை இன்னும் கருகி விடவில்லை: ஆனால் அதன் மஹிமை பறந்தோடி விட்டதே!"

ஒரு காலத்தில், நீரஜாவின் மனதில் துளியேனும் சந்தேகமாவது பயமாவது புகுந்திருக்கவில்லை. அவள் ஆட்சி செலுத்திய நாளில் மூன்றாவது ஆள் குறுக்கிடவில்லை. அவளைச் சுற்றியிருந்த ஆகாயம் அருணனின் ஒளி திகழும் வைகறைப் பொழுதைப் போல் ஏகாந்தமாகவே இருந்தது. இன்றோ எங்காகிலும் நிழலைப் பார்த்தாலே அவள் உள்ளம் ஏதனாலோ திக்கென்று சிலிர்த்தது. தன் பேரிலேயே அவளுக்கு நம்பிக்கை குறைந்து வந்தது. இந்த லரனா யார்? அவனுக்கு இத்தனை அகம்பாவமா?' — இவர்கள்

பால் மூண்ட சந்தேகமே இன்று நீரஜாவின் மனத்தை மிகவும் உலுக்கிவிட்டது.

"ரோஷ்னி! இதைக் கேட்டுவிட்டுப் போ" என்று ஆயாளைக் கூப்பிட்டாள்.

"என்ன அம்மா? நேற்று ராத்திரி நீ சரியாகத் தூங்கவே இல்லை. இப்பொழுதும் இப்படி அலட்டிக் கொண்டிருந்தால்? சற்றுத் தூங்கம்மா; காலைப் பிடிக்கிறேன்; தூங்கு."

"ரோஷ்னி, இன்று பௌர்ணமிக்கு மூந்தின நாள்தானே? இந்த மாதிரி நிலாக் காலங்களில் நான் எத்தனையோ இரவு தூங்காமலே இருந்திருக்கிறேன். அவரும் நானும் தோட்டத்தைச் சுற்றிச் சுற்றி உலாவுவோம். அந்த நாள் எங்கே? இந்த நாள் எங்கே? தூங்கினால் நல்லதுதான்; ஆனால் பாழும் தூக்கம் கொஞ்சத்தில் வரமாட்டேனென்கிறதே, என்ன செய்வது?"

"பேசாமல் கண்ணை மூடிக் கொள். தூக்கம் தானாகவே வருகிறது பாரேன்" என்றாள் ஆயா.

"அவர்கள் கூட இந்த மாதிரி நிலாக் காயும் இரவு நேரங்களில் தோட்டத்தில் கை கோர்த்துக் கொண்டு உலாவுகிறார்களா?"

"விடியும் நேரத்தில் மார்க்கெட்டுக்காக இரண்டு பேரும் பூப் பறிப்பார்கள்; பார்த்திருக்கிறேன். உலாவ, அவர்களுக்குச் சமய மேது?"

"அவர்களேயா புஷ்பம் பறிக்கிறார்கள்? தோட்டக்காரர்களெல்லாம் சொந்தமாகத் தூங்குகிறார்கள் போலிருக்கிறது! ஒரு வேளை வேலைக்காரர்கள் வர வேண்டாமென்று இவ்வாறு செய்கிறார்களோ?"

"கவனிப்பதற்கு நீ இல்லையல்லவா? அவர்களைக் கேட்பார் யார்?"

"அதோ நமது வண்டி வருகிற சப்தம்."

"ஆமாம் அம்மா! பாபுவின் வண்டிதான்."

"கைக் கண்ணாடியை எடு. கலசத்திலிருக்கும் அந்தப் பெரிய ரோஜாப் பூவை என்னிடம் தா. ஸேப்டி பின் வைத்திருந்தேனே, அந்தப் பெட்டி எங்கே பார். என் மூஞ்சி ரொம்பவும் வெளுத்து இருக்கிறதா என்ன?"

"ஏன் இப்படிப் பரபரப்படைகிறாய், அம்மா?"



"ரோஷ்னி! நீ போய்விடு."

"போகிறேன். பார்லி கஞ்சி ஆறிவிடுகிறதே. முதலில் அதைச் சாப்பிட்டு விடு."

"அது கிடக்கட்டும்...எனக்கு இப்போது வேண்டாம்."

"இரண்டு டோஸ் மருந்து, புட்டியில் அப்படியே இருக்கிறது......இன்று ஏன் அதைச் சாப்பிடவில்லை நீ?"

"வளவளவென்று பேசாதே. போ நீ ..."

ஆயா போய்விட்டாள்.

'டங் டங்' என்று மூன்று மணி அடித்தது கடிகாரத்தில்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ஆதித்தியன் அறைக்குள் வந்தான். அவன் கை நிறைய ஆரஞ்சு வர்ணமான 'லாபர்னம்' என்ற பூவின் கொத்து இருந்தது. அதை நீரஜாவின் காலண்டை வைத்தான். படுக்கையின்மேல் உட்கார்ந்தபடி அவளுடைய கைகளைப்பற்றி, "இன்று ரொம்ப நாழிகையாக உன்னைப் பார்க்காமலே இருந்து விட்டேன், நீரு!" என்றான். அதற்கு மேல் நீரஜாவினால் தாங்க முடியவில்லை. தேம்பித் தேம்பி அழுதாள். ஆதித்தியன் கட்டிலை விட்டு இறங்கித் தரையில் முழந்தாள் இட்டவண்ணம் அவள் கழுத்தைக் கட்டிக்கொண்டான். கண்ணீர் தோய்ந்த அவளது கன்னத்தில் முத்தம் கொடுத்து, "இது என் தவறல்ல என்பது நிச்சயமாக உன் மனசுக்கே தெரியும்" என்றான்.

"அவ்வளவு நிச்சயமாக எப்படி எனக்குத் தெரிந்து விடும்; சொல்லுங்கள்? அந்த நாள் திரும்பி வரப் போகிறதா?"

"என் வராது? எனக்கு நீ எப்பொழுதும் அந்தப் பழைய நீரஜாதான்."

"இப்போதெல்லாம் எனக்கு எதைப் பார்த்தாலும் பயமாயிருக்கிறது."

"எனக்குக் கொஞ்சம் பயங்காட்டப் பார்க்கிறாய்; அப்படித்தானே? எதையோ நினைத்துக்கொண்டு என்னைக் கிள்ளப் பார்க்கிறாய்; தெரிகிறதே! பெண்களுக்கே உடன் பிறந்தது இந்தக் குயுக்தியான புத்தி."

"எதையும் மறந்து போவது புருஷர்களுடைய ஸ்வபாவமில்லையாக்கும்?"

"எதை மறந்தேன், அத்தாட்சி காட்டு."

"அதற்கென்ன, வாய் கிழியப் பேசலாம். விதியின் சாபத்தால் இதோ உங்கள் எதிரில் நானே அத்தாட்சியாக இருக்கிறேனே."

"நீ பேசுவது முன்னுக்குப் பின் விரோதமாயிருக்கிறது. ஸுகித்திருந்த தினங்களில் மறதி ஏற்படுவதுண்டு; துக்கம் அனுபவிக்கும் நாளில் மறப்பது கிடையாது."

"சத்தியமாகச் சொல்லுங்கள்; இன்று காலை நீங்கள் என்னை மறந்தே போய்விடவில்லையா?"

"என்ன அசடு மாதிரி பேசுகிறாய், நீரு! முக்கியமாகப் போகவேண்டியிருந்தது; ஆனால் திரும்பி வரும் வரை என் மனம் பட்டபாடு எனக்குத்தான் தெரியும்."

"நீங்கள் இந்தமாதிரி தரையில் கிடக்க வேண்டாம். படுக்கையில் உட்காருங்கள்."

"நான் ஓடிப் போய்விடுவேனென்று என்னை மடக்கிக் கொள்ளவா?"

"ஆமாம். மரண பரியந்தம் உங்கள் பாதமிரண்டும் எனக்கல்லவோ அடகு வைக்கப்பட்டிருக்கின்றன!"

"நடு நடுவே இந்த மாதிரி சந்தேகம் கொள்வது, என்மேல் உள்ள அன்பின் சுவையைப் பின்னும் அநுபவிப்பதற்குத்தானே?"

"இல்லை, துளிக்கூட சந்தேகம் இல்லை. கொஞ்சங்கூட இல்லை. உங்களைப்போல ஒரு புருஷனை வேறு எந்தப் பெண் பெறக் கொடுத்து வைத்திருக்கிறாள்? உங்களிடத்திலா சந்தேகம்! அப்படி இருந்தால் என்னைப் பார்த்துத் தூ வென்று துப்ப வேண்டும்."

"நானாக இருந்தால் உன்மேல் சந்தேகம் கொள்வேன்; இல்லாவிட்டால் இந்த இல்லற நாடகத்தில் ஸ்வாரஸ்யம் ஏது?"

"வேண்டுமானால் தாராளமாகக் கொள்ளலாமே ... அது பிரஹஸனமாக (ஹாஸ்ய நாடகமாக) அல்லவோ முடியும்!"

"நீ என்ன சொன்னபோதிலும், இன்று என் மேல் உனக்குச் சற்றுக் கோபந்தானே!"

"தப்பித் தவறி நான் என்றைக்காவது உங்கள் பேரில் கோபம் கொண்டிருந்தேனானால், நிச்சயமாக அதற்குப் பொறுப்பு நானல்ல. ஏதோ துஷ்ட தேவதைதான் என்னுள் புகுந்து என்னை ஆட்டி வைத்திருக்க வேண்டும்."

"நம் ஒவ்வொருவரிடத்திலுந்தான் அந்த மாதிரி ஒரு துர்த்தேவதை குடி கொண்டிருக்கிறது. நடு நடுவே அதன் ஸ்வரூபத்தையும் காட்டிவிடுகிறது. நல்ல அறிவு இருந்து 'ராம, ராம'வென்று சொன்ன மாத்திரத்தில் அது ஓட்டம் பிடிக்காதா?"

அப்பொழுது ஆயா உள்ளே வந்தாள். ஆதித்தியனைப் பார்த்து, "பாபு, இன்று காலை முதல் அம்மா எதைக் கொடுத்தாலும் சாப்பிட மறுக்கிறாள். மருந்து வேண்டாமென்கிறாள். உடம்பைப் பிடித்து விடுகிறேனென்றால் தடுத்து விடுகிறாள். இப்படி இருந்தால் இவளோடு என்னால் மல்லுக்கொடுக்க முடியாது ... சொல்லிவிட்டேன்: உங்கள் பாடு" என்று கூறிவிட்டு 'ஹூம் ஹூம்' என்று கையை வீசிக்கொண்டே சென்றாள்.

இதைக் கேட்டதும் ஆதித்தியன் எழுந்திருந்து "இனிமேல் உன்னை நான் கோபித்துக் கொள்ளப் போகிறேன்" என்றான்.

"தாராளமாகக் கோபித்துக் கொள்ளுங்கள். நான் செய்தது பிசகுதான். ஆனால் அப்புறம் மன்னித்து விடுங்கள்."

ஆதித்தியன் அறைக்கு வெளியே நோக்கி, "ஸரளா, ஸரளா —" என்று கூப்பிட்டான். அந்தப் பெயர் நீரஜாவின் நரம்புதோறும் மின்னல் பற்றியதுபோல் ஒலித்தது. "விஷ முள்ளில் கை தீண்டியது போலாயிற்றே இது என்ன?" என்று அவளுக்குத் தோன்றியது.

(தொடரும்)

# தமிழ் வளர்ந்த கதை

## 4. தொல்காப்பியர் கண்ட தமிழ்நாடு

இந்தியாவின் தெற்கு எல்லையும், தமிழ்நாட்டின் தெற்கு எல்லையும் கன்னியா குமரி என்ற குமரி முனைதான் என்பதைச் சிறுவரும் அறிவர்.

**வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து**

[ஆயிடை: அ + இடை: அவ்விடம்; தமிழ்கூறும் நல்லுலகத்து: தமிழ் மொழி பேசும் நல்ல உலகத்திலே.]

என்று தொடங்கும் தொல்காப்பியப் *பாயிரமும், தமிழ்நாட்டின் வட எல்லையாக வேங்கடம் என்ற திருப்பதி மலையைக் குறிப்பிட்டுத் தென் எல்லையாகக் குமரியைத்தான் குறிப்பிடுகிறது. "இதற்குப் பிரமாதமான பூமி சாஸ்திர ஞானம் வேணுமா? தொல்காப்பியப் பாயிரத்தின் ஆதாரம்தான் தேவையா?" என்று கேட்கலாம்.

### கடல் கொண்ட பிரதேசம்

ஆனால் இந்தக் குமரி, முனையல்ல; ஒரு நதி — என்கிறார்கள் இளம்பூரணர், பேராசிரியர் முதலான உரையாசிரியர்கள். பாண்டி நாட்டின் தென் பகுதியில் ஓடிக்கொண்டிருந்த குமரியாறு என்ற ஓர் ஆறுதான் அது; குமரி முனையே அந்தக் காலத்தில் கிடையாது — என்று உரையாசிரியர்கள் உறுதி கூறுகிறார்கள். தமிழ் நாடு முற்காலத்தில் இன்றுபோல் கன்னியா குமரியில் முடிவு பெறவில்லையாம். இந்தக் குமரிக்கும் தெற்கே குமரியாறும் அதற்கப்பால் நிலப்பகுதியும் இருந்தனவாம். அந்த நிலப்பகுதி கடலில் முழுகிப்போய் விட்டதென்கிறார்கள். "அப்படியா செய்தி? அல்லது கதைதானா?" என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

மேலே குறித்த தொல்காப்பியப் பாயிரத்துக்கு உரை எழுதும்போது, உரையாசிரியரான இளம்பூரணர், "கடல் கொள்வதன் முன்பு பிறநாடும் உண்மையின், தெற்கும் எல்லை கூறப்பட்டது; கிழக்கும் மேற்கும் பிறநாடு இன்மையின் கூறப்படாவாயின" என்கிறார். 'தமிழ் கூறும் நல் உலக'த்திற்குக் கிழக்கும் மேற்கும் எல்லை கூறவில்லை; பிறநாடுகள் இல்லாமல் கடலாயிருந்ததுதான் காரணம். தெற்கே வேறு நாடு இருந்ததாம். அதனால்தான் குமரியாறு எல்லையாகக் கூறப்பட்டதாம். அந்தத் தமிழ்நாட்டின் பகுதியையும், குமரியாற்றையும், அதற்கு அப்பாலிருந்த அந்தப் பிற நாட்டையும் கடல் கொண்டது; அவற்றைக் கடல் கொள்வதற்கு முன்பே தோன்றியது தொல்காப்பியம் — என்பது பழைய உரையாசிரியரான இளம்பூரணரின் அபிப்பிராயம். இந்த அபிப்பிராயம் பின்னே வந்த பிரபல உரையாசிரியர்களுக்கும் உடன்பாடுதான்.

### கடலில் முழுகிய தலைநகரம்

அக்காலத்தில் பாண்டிய மன்னர்களுடைய தலைநகரமாயிருந்த கபாடபுரமும் அந்தக் *கடல்கோளில் அழிந்து போய்விட்டதாம். கபாடபுரத்திலேதான் இடைச் சங்கம் நடைபெற்றதென்றும், அங்கேதான் தொல்காப்பியத்தை அரங்கேற்றித் தொல்காப்பியரும் அந்தச் சங்கத்தின் முக்கிய அங்கத்தினரானார் என்றும் சொல்லுகிறார்கள்.

கபாடபுரத்தைப் பற்றிய பிரஸ்தாபம் வால்மீகி ராமாயணத்திலும் வருகிறது. சுக்கிரீவன் சீதையைத் தேட வழி சொல்லும்போது, பாண்டியர்களுடைய கபாடபுரத்தையும் பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்று கட்டளையிடுவதாக வால்மீகி கூறுகிறார். அந்த நகரத்தை அம் முனிவர், "பொன் நிறைந்ததாயும், அழகுடையதாயும், முத்து மயமான மணிகளால் அலங்கரிக்கப் பெற்றதாயும், பாண்டியர்களுக்குத் தகுந்ததாயும் உள்ள கபாடம்" என்று வர்ணிக்கிறார். தாமிரபர்ணி கடலுடன் கலக்கும் இடத்திலே அந்தப் பாண்டிய ராஜதானி இருந்ததென்பது வால்மீகியின்

*பாயிரம்: முகவுரை.

*கடல்கோள்: கடல் கொள்ளுதல்.

குறிப்பு. அந்த நகரம் சுமார் 2,200 ஆண்டுகளுக்கு முன் இருந்த சந்திர குப்த சக்கரவர்த்தி காலம் வரையிலும் பிரசித்தமா யிருந்ததாம்.

அந்தக் காலத்திற்குச் சிறிது பின்பு கபாடபுரத்தையும் குமரியாற்றையும் தென்னாட்டுப் பகுதியையும் கடல் அழித்திருக்கலாமென்று சிலர் ஊகிக்கிறார்கள். ஆனால் கடல் கொண்ட தமிழ் நாட்டின் பகுதி அதிகமாக இல்லையென்பதும், ஒரு சிறு நிலப்பகுதி யாகத்தான் இருக்கவேண்டுமென்பதும் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரின் அபிப்பிராயம்.

எனினும் இந்தக் கடல் கோள் சில தமிழர்களின் மனோபாவத்திலே ஏதோ ஒரு பெரிய யுகப் பிரளயம் போலப் பெருகி விட்டது. நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் என்ற இரண்டு உரையாசிரியர்களும், தெற்கே ஒரு நாடு. இரண்டு நாடல்ல — நாற்பத்தொன்பது நாடுகளை — ஐயோ!—கடல் விழுங்கிவிட்டது என்கிறார்கள். அந்தக் கடலைக் 'கொடுங் கடல்' என்றார் சிலப்பதிகார ஆசிரியர் உணர்ச்சியோடு. இந்நாளிலும சிலர் மனோபாவத்தின் லகானை அப்படியே விட்டு விட்டு, "ஆம், ஆம்; அந்த நாற்பத்தொன்பது நாடுகளின் முழுப்பரப்பும் தென் அமெரிக்கா தொடங்கி ஆப்பிரிக்கா இந்தியா என்னும் நாடுகளோடு இணைந்து ஆஸ்திரேலியா வரையில் விரிந்திருந்தது; ஐயோ, போய் விட்டதே!" என்றெல்லாம் உருகிக் கண்ணீர் வடித்து 'ஆராய்ச்சி' செய்த வண்ணமா யிருக்கிறார்கள்!







## மலையாளத்தில் தமிழ்

இப்படியெல்லாம் கனவிலே, கதையிலே, கடலுக்கடியிலே, கண்ணீர் வெள்ளத்திலே காணும் தமிழ் நாடல்ல தொல்காப்பியர் கண்ட தமிழ்நாடு! தொல்காப்பியர் உண்மையும் வலிமையும் வாய்ந்த தமிழ் நாட்டைக் கண்டார்; கஷ்ட நஷ்டங்களுக்கு அஞ்சாத — அபாயங்களையும் துணிந்து காதலித்த தமிழர்களைக் கண்டார்.

அந்தக் காலத்தில் கன்னடநாடும் மலையாள நாடும் தமிழ்நாட்டின் பகுதியாகவே யிருந்தன. தெலுங்கு மாத்திரம் தனிமொழியாகி விட்டது. கன்னட பாஷை பிரிந்து சுதந்திர பாஷையாகப் போய்விடவில்லை; இன்று மலையாளம் பேசும் பிரதேசங்களில் அந்நாளில் சுத்தத் தமிழே பேசப்பட்டு வந்தது.

"வெயிலில் போகாதே" என்று நாம் சொல்வதை மலையாளிகள் "வெயிலத்துப் போகருதெ" என்கிறார்கள். "வெயிலத்துப் போகாதே" — என்றுதான் சொல்லுவார் தொல்காப்பியரும்; தற்காலத் தமிழர்களைப் போல் "வெயிலில் போகாதே" என்று சொல்லமாட்டார். 'பனியில்' 'மழையில்' என்றும் சொல்ல மாட்டார்; 'பனியத்து' 'மழையத்து' என்றுதான் பேசுவார். மலையாள பாஷை ஒன்றுதான், 'வெயிலில்' 'மழையில்' 'பனியில்' என்று நாம் சொல்வதை, 'வெயிலத்து' 'மழையத்து' 'பனியத்து' என்று வழங்குகிறது.

மேலும் தொல்காப்பியர், "பெண் மகன் வந்தாள்" என்பார். மலையாள நாட்டிலே 'பெண் ராஜா' என்று இன்றும் சொல்லுவோர் உண்டு.

எனவே, அக்காளில் இப்படிப்பட்ட தமிழ் வழங்கி வந்த மலையாளப் பிரதேசத்திலே தொல்காப்பியர் வாழ்ந்து வந்தார் என்று சென்னைச் சர்வகலாசாலைத் தமிழாராய்ச்சித் தலைவர் ஊகம் செய்வது தவறாகாது. அந்தப் பிரதேசத்திலும் 'திருவாங்கூர்' என்று இந்நாளில் சொல்லப்படும் திருவிதாங்கோடு தொல்காப்பியரின் பிறப்பகமாயிருந்திருக்கலாம் என்றுகூட ஊகம் செய்யப்படுகிறது.

### அதங்கோட்டாசான்

திருவிதாங்கோடு என்பது இப்பிரதேசத்தில் ஒரு பழைய ஊருக்கும் பெயர். 'திருவிதாங்கோடு' என்பதைத் 'திருவதாங்கோடு' என்றும் சொல்வதுண்டு. 'திரு' என்பது அடைமொழி: எனவே ஊரின் பெயரும் இந்தப் பிரதேசத்தின் பெயரும் 'அதாங்கோடு' என்று இருக்கவேண்டும். தொல்காப்பியர் காலத்தில் 'அதாங்கோடு' 'அதங்கோடு' என்று இருந்ததாகவும், அவ்வூரைச் சேர்ந்த ஆசிரியரான அதங்கோட்டாசான் என்பவரோடு தொல்காப்பியர் ஒரு சாலை மாணாக்கராயிருந்து கல்வி கற்றதாகவும் ஊகிக்கலாம். 'அதங்கோட்டாசான்' என்பது போன்ற பெயர்களை மலையாளப் பிரதேசத்தில் இன்றும் கேட்கலாம்.

இந்த ஆசானைத் தொல்காப்பியப் பாயிரம்,

> அறம்கரை நாவின்
> நான்மறை முற்றிய
> அதங்கோட்டாசான்

— அதாவது, தருமமே கூறும் நாலு வேதங்களையும் முற்றப் பயின்ற அதங்கோடு என்னும் ஊரின் ஆசிரியன் — என்று குறிப்பிடுகிறது. இந்த ஆசானுக்குத் தொல்காப்பியரே தமது தொல்காப்பியத்தை ஒரு பாண்டிய மன்னனுடைய சபையிலோ, சங்கத்திலோ, குற்றமற வாசித்துக் காட்டினாரென்றும் மேலே கூறிய பாயிரம் தெரிவிக்கிறது.

இந்தப் பாயிரம் இயற்றியவரின் பெயர் பனம்பாரனார். இவருடனும், அதங்கோட்டாசானுடனும், இன்னும் ஒன்பது பேர்களுடனும் அகஸ்தியருடைய குருகுலத்திலே தொல்காப்பியர் தமிழாராய்ச்சி செய்தாராம்.

# மத்ய சட்டசபைத் தேர்தல்

## ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி எழுதுகிறார் :

நம் அன்பார்ந்த தலைவர் ஸ்ரீ. எஸ். சத்தியமூர்த்தியின் மரணத்தினால் துயரமடைந்திருக்கும் சென்னை நகரவாசிகள், அவர் வகித்திருந்த மத்ய சட்டசபை ஸ்தானத்துக்கு ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. இந்த சந்தர்ப்பத்தில், தேசிய இயக்கத்தின் விரோதிகள், நம் அரும்பெரும் தலைவர்களும் காங்கிரஸ் வாதிகளும் சிறையிலிருப்பதைத் தங்களுக்கு அனுகூலமாக உபயோகித்துக் கொண்டு, தேச நலனுக்குப் பாதகமான காரியங்களைச் செய்யக் கூடுமென்ற எண்ணத்தினால் என் நண்பர்கள் என்னை மேற்படி ஸ்தானத்திற்கு அபேக்ஷகனாக நிற்கும்படி யோசனை சொன்னார்கள். அவர்களுடைய விருப்பத்துக்கு இணங்க நான் அபேக்ஷகனாக நிற்க ஒப்புக்கொண்டிருக்கிறேன். காங்கிரஸ் மகா சபையின் இலட்சியந்தான் என்னுடைய இலட்சியமுமாகும். இந்தியா பரிபூரண சுதந்திரம் அடைய வேண்டுமென்பதையும், பிரிட்டன் அந்த அந்தஸ்தை ஒப்புக் கொள்வதற்கு அறிகுறியாக யுத்த நிலைமை இடம் கொடுக்கும் அளவுக்கு உடனே ஜனப்பிரதிநிதிகளிடம் எல்லா அதிகாரத்தையும் மாற்ற வேண்டும் என்பதையும் நான் ஆதரிக்கிறேன். ஆகஸ்ட் தீர்மானத்தின் பேரில் மகாத்மா காந்தியும் இதர காங்கிரஸ் தலைவர்களும் உத்தேசித்திருந்தபடி சமரசப் பேச்சுக்களைத் தொடர்ந்து நடத்தும் பொருட்டு அவர்களை உடனே விடுதலை செய்ய வேண்டுமென்பது என் கட்சி. தேச மக்களின் விருப்பத்தைத் தீவிரமாக வற்புறுத்தி, தேசிய கோரிக்கையை பிரிட்டன் ஒப்புக் கொள்ளும்படி செய்யும் பொருட்டு நமது உள்நாட்டுச் சக்திகளையெல்லாம் ஒன்று திரட்டி, ஒற்றுமை உண்டாக்குவதற்குச் செய்யும் முயற்சிகளை நான் ஆதரிக்கிறேன். மேற்சொன்ன இலட்சியங்களுடன், தேசிய இயக்கத்தின் முன்னணியில் நின்று உழைக்கும் எல்லோருடனும் நான் சேர்ந்து வேலை செய்து வருவேன்.

நான் பாலத்தின் கீழே குனிந்து பார்த்தேன்! எனக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த வீரபத்திர முதலியார் திடீரென்று "ஹா, ஹா, ஹா" என்று கோரமாகச் சிரித்ததைக் கேட்டு எனக்குக் குலை நடுங்கிற்று. அடுத்த வினாடி ......

# நினைக்காத கதை

[வி. எஸ். ஆர்.]

"நான் எப்படிக் கதை எழுதுகிறேன்?" என்று சில ஆசிரியர்கள் கட்டுரை எழுதுவதுண்டு. ஒரு கதாசிரியருக்கு ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களைப் பார்த்துக்கொண்டிருந்தால் தான் கற்பனை வருமாம். இன்னொரு எழுத்தாளருக்குச் சாலையில் உள்ள லாந்தர் கம்பத்தின் மேல் மள மளவென்று ஏறினால்தான் கற்பனையும் தடபுடலாக ஓடுமாம். என்னிடம் "எப்படிக் கதை எழுதுகிறாய்?" என்று கேட்டால், "தெரியாது" என்று சட்டென்று பதில் சொல்லிவிடுவேன். சில சமயம் ஏதோ கதை எழுத வருகிறது; இன்னும் சில சமயம் எவ்வளவு முயன்றாலும் ஒன்றும் தோன்றுவதில்லை.

இவ்விதம் ஒரு முறை கற்பனா சக்தி அடியோடு வறண்டு போயிருந்த சமயத்தில், மேல் நாட்டு ஆசிரியர்கள் கதைகள் எழுதுவதற்காகப் பிரயாணம் செய்யக் கிளம்புவார்கள் என்று கேட்டிருந்தது ஞாபகம் வந்தது. பிரயாணத்தின் போது அவர்கள் காணும் சில உண்மையான சம்பவங்களை வைத்துக் கொண்டே கதைகள் எழுதிவிடுவார்களாம். அதே மாதிரி காணும் பார்த்து எழுத வேண்டுமென்பதற்காகவே சில சம்பவங்கள் சூடுமந்திரமாக எங்கேயோ ஒளிந்து கொண்டிருப்பதாக நினைத்தேன். சிற்சில மர்மமான மனிதர்கள் அற்புதக் குரல்களில், "வா, வா" என்று அழைப்பதாகத் தோன்றியது. உடனே, அறையைப் பூட்டிக் கொண்டு எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனைப் பார்க்க நடந்தேன்.

நான் எந்த ஊருக்கு டிக்கட் வாங்கினேன், எந்த இடத்தில் இறங்கினேன் என்று மட்டும் தயவு செய்து கேட்காதீர்கள். பட்டணத்தை விட்டு வெகு தூரம் வந்துவிட்டேன் என்பதைமட்டும் ஞாபகம் வைத்துக் கொண்டால் போதும். ஒரு சிறிய ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி ஒரு பஸ்ஸில் ஏறிக் கொண்டேன். பஸ் மணிக்கு ஐந்தேகால் மைல் வேகத்தில் பறந்து போய்க் கொண்டிருந்தது.

அப்பொழுது காலை வேளை. சாலையின் இருபுறமும் மரங்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. "சிலுசிலு"வென்று குளிர் காற்று வீசிற்று; அருகிலுள்ள ஆற்றில் தொங்கும் நுரையுமாக வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. "ஆஹா! எவ்வளவு அழகான இடம்! இங்கே தான் கொஞ்ச நாள் தங்கிவிட்டால் போகிறது! இங்கே ஒரு கிராமம் இராதா?" என்று நினைத்தேன். அருகிலேயே, நூறு, நூற்று ஐம்பது வீடுகள் உள்ள சிறு கிராமம் இருந்தது. பஸ்ஸை நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டேன்.

கிராம வாழ்க்கையை வைத்துக் கொண்டு நிச்சயமாக ஒரு கதை எழுதி விடலாம் என்ற தைர்யத்துடன் அந்தக் கிராமத்தின் தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்தேன். ஒரு வீட்டின் வாசலில் "சைவாள் சாப்பாட்டு கிளப்" என்ற துருப்பிடித்த போர்டு தொங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்து நின்றேன்.

"யாரையா அது? அப்படிப் பார்க்கிறது?" என்று வீட்டுக்குள்ளேயிருந்து ஒரு குரல் கேட்டது. பயங்கர ஆகிருதியுடனும் கறுத்த மீசையுடனும் ஒருவர் வெளியே வந்தார். நான் வாசலில் போட்டிருந்த போர்டைச் சுட்டிக் காட்டி, "அதைப் பார்த்து விட்டுத்தான் நின்றேன்" என்று சொன்னேன்.

"அது உம்மை என்ன செய்கிறது உம் கண்ணை உறுத்துகிறதா?" என்று கேட்டார்.

"இல்லை, கோபித்துக் கொள்ளாதீர்கள். கிராமத்தில் கொஞ்சநாள் தங்கலா

மென்று வந்தேன். உங்கள் ஊளப்பைப் பற்றிப் பட்டணத்திலேயே கேள்விப் பட்டிருக்கிறேன்'' என்று சொல்லி வைத்தேன். இப்படிச் சொன்னதுந் தான் மீசைக்காரர் முகம் மலர்ந்தது.

"ஊளப்பை நான் நிறுத்தி எத்தனையோ நாளாகிவிட்டது. இருந்தாலும் எப்பொழுது என் வீட்டைத் தேடி வந்து விட்டீர்களோ அப்பொழுது தாராளமாக இங்கே தங்கலாம். உள்ளே வாருங்கள்'' என்று சொல்லி என்னை அழைத்துக் கொண்டு போனார்.

அன்று, சாயங்காலம் சற்று தூரம் உலாவிவிட்டு வருவதற்காகப் புறப்பட்டேன். அந்த வீட்டில் நுழைந்தது முதற்கொண்டு என் மனதில் சொல்ல முடியாத ஒரு கலக்கம் ஏற்பட்டிருந்தது.

முதன் முதலாக அந்த மீசைக்கார வீரபத்திர முதலியாரை எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. அவரது கறுப்பு மீசையைவிட, 'ஜிவ் ஜிவ்' என்று சிவந்த அந்தக் கண்கள் அதிக அருவருப்பைக் கொடுத்தன. அடுத்தாற்போல அவரது சம்சாரம் கற்பகத்தம்மாளை நினைக்கும்போது, சொல்ல முடியாத பரிதாப உணர்ச்சி தோன்றிற்று. அவளுடைய கலங்கிய கண்களும், சோக முகமும் என் முன் தோன்றி வேதனையைக் கொடுத்து வந்தன. அந்த வீட்டுக்குள் புகுந்த மறுகணமே, அந்தப் பொல்லாத மீசைக்காரன் மனைவியைப் படாத பாடுபடுத்துகிறான் என்று தெரிந்து கொண்டேன். நான் வந்ததிலிருந்து சமையலறையில் அடிக்கடி முதலியாரின் அதட்டல் சப்தத்துடன், அந்த அம்மாளின் அழுகைச் சப்தமும் கலந்து வந்தது. "பாவி மனுஷன் எத்தனை வருஷமாக இந்த மாதிரி மனைவியைக் கஷ்டப் படுத்துகிறானோ தெரியவில்லையே. இதைப் பார்க்கத்தானா நான் இங்கே வரவேண்டும்?'' என்று நினைத்தேன். ஆனால் அந்த வீட்டை விட்டு நான் போய் விடலாமல்லவா? அந்த எண்ணந்தான் எனக்குத் தோன்றவில்லை.

அதற்கு மாறாக, அந்த வீடு என் உள்ளத்தைக் கவர்ந்து இழுக்க ஆரம்பித்தது. இதற்குக் காரணம் சூடாமணிதான். கற்பகத்தம்மாளின் தங்கை சூடாமணி.

பெட்டியைத் தூக்கிக்கொண்டு முதன் முதலில் வீட்டிற்குள் நுழையும்போதே மிரண்ட விழிகளுடன் சூடாமணி மையற் கட்டுக்குள் மறைவதைப் பார்த்தேன். அவள் மறைந்துவிட்ட போதிலும் அந்த மிரண்ட பார்வை என் மனதை விட்டு அகலவில்லை. அந்த விழிகளை நினைக்கும் போதெல்லாம் முதலியாரின் மீசையும் என் மனதில் தோன்றி "ஜாக்கிரதை! அவளை நெருங்காதே!'' என்று என்னை மிரட்டிக் கொண்டிருந்தது.

"நாம் கதை எழுதவல்லவா வந்தோம்? இந்தக் கவலையெல்லாம் நமக்கு ஏன்?'' என்று எண்ணிக்கொண்டே சாலையோடு நடந்து சென்றேன். வழியில் ஒரு பாலம் இருந்தது. அதன் மேல் உட்கார்ந்தேன். 'சல சல' வென்ற சப்தத்துடன் ஆற்று நீர் ஓடிக் கொண்டிருந்தது. கீழே குனிந்து பார்த்தேன். நான் உட்கார்ந்து கொண்டிருந்த கல்லில் 'முதலியார் பாலம்' என்று செதுக்கப்பட்டிருந்தது. இது யார் முதலியார்? யாராவது ஜில்லா போர்டு பிரஸிடெண்டா? அல்லது ராவ்பகதூரா, திவான்பகதூரா?

ஒருவேளை ஹோட்டல்கார வீரபத்திர முதலியார்தானா? "சீ சீ! அந்த மீசைக்காரன் பெயரைப் போட்டுப் பாலத்தைக் கெடுப்பார்களா? மாட்டவே மாட்டார்கள்'' என்று சமாதானம் செய்து கொண்டேன்.

அந்த சமயத்தில் ஒரு குடியானவன் அருகில் போய்க்கொண்டிருந்தான். "யாரப்பா? முதலியார் பாலம் என்று இதில் போட்டிருக்கிறதே! யார் அந்த முதலியார்?'' என்று கேட்டேன். அவன் பதில் சொல்லாமல் என்னை முறைத்துப் பார்த்தான். பிறகு திரும்பி நடக்க ஆரம்பித்தான். "இதில் ஏதோ விசேஷம் இருக்கவேண்டும்'' என்ற எண்ணம் என் மனதில் பதிந்தது. அதைத் தெரிந்து கொள்ளாமல் விடக்கூடாது என்று தீர்மானம் செய்து கொண்டேன். ஏதேனும் விசேஷமான தகவல் கிடைத்தால் ......... ஆமாம், அதை வைத்துக் கொண்டு கதை எழுதலாமல்லவா?

தூரத்தில் மேட்டுப் பாங்கான இடத்தில் ஒரு சிறிய குடிசை தெரிந்தது. அந்தக் குடிசையை நோக்கி நடக்க ஆரம்பித்தேன். அதன் வாசலில் ஒரு கிழவனார் ஒரு கட்டிலில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"ஐயா! அதோ அங்கே முதலியார் பாலம் என்று இருக்கிறதல்லவா? அதற்கு ஏன் அந்தப் பெயர் வைத்திருக்கிறார்கள்?'' என்று கேட்டேன். அப்படிக் கேட்டதும் அந்தக் கிழவனாரின் முகம் திடீரென்று மாறுதல் அடைந்ததைப் பார்த்தேன்.

"அதைப்பற்றி எனக்கென்ன தெரியும்?" என்று 'சள்'ளென்று விழுந்தார் அவர்.

"நீங்கள் இந்த ஊர்க்காரர்தானே. உங்கள் ஊரில் இருக்கிற பாலத்திற்கு எதற்காக அந்தப் பெயர் வந்திருக்கிறதென்று கூட உங்களுக்குத் தெரியாதா?"

"தெரியாது. ஊரில் இருக்கிற இழவுகளெல்லாம் எனக்குத் தெரிய வேண்டுமென்று கட்டாயமா?" என்று சொல்லி உள்ளே போய் 'டக்'கென்று கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டார்.

மறுபடியும் கொஞ்ச தூரம் போனபோது எதிரில் ஒரு மனிதர் வந்தார். அவர் படித்த நாகரிக மனிதராகக் காணப்பட்டார். அவருடன் பேச்சுக் கொடுத்து, அவர் அந்த ஊர் போர்டு பாடசாலை உபாத்தியாயர் என்று தெரிந்து கொண்டேன். முதலியார் பாலத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தேன். அந்த ஊருக்கு அவர் வந்து ஒரு வருஷந்தான் ஆயிற்றாம். ஆகையால் விவரமாக ஒன்றும் தெரியாதாம். ஆனால் செங்கல்பட்டு ஜில்லாவிலிருந்து வந்த யாரோ ஒரு வாலிப கண்டிராக்டர் அந்தப் பாலத்தைக் கட்டியதாக அவர் கேள்விப் பட்டிருந்தாராம். மேலதிகாரியின் உத்தரவுப்படி பாலத்தைச் சீக்கிரம் கட்டி முடிக்கவேண்டும் என்பதற்காக ஒரு நாள் இரவு மழைக் காலத்தில் அந்தக் கண்டிராக்டர் 'காஸ் லைட்' போட்டுக்கொண்டு வேலை செய்து கொண்டிருந்தாராம். அப்பொழுது துரதிருஷ்டவசமாகக் கால் வழுக்கி ஆற்றில் விழுந்து விட்டாராம். அவர் ஞாபகார்த்தமாகத்தான் அந்தப் பாலத்துக்குப் பெயர் வைத்தார்கள் என்று மட்டும் தெரியுமே தவிர, வேறு ஒன்றும் தெரியாது என்று சொன்னார்.

அந்தக் கதையைக் கேட்டவுடன் என் வயிறு கலங்கிற்று. ஐயோ! ஊரை விட்டு வந்த அந்த கண்டிராக்டருக்கு இப்படியா திடீர் மரணம் சம்பவிக்க வேண்டும்? அதுவும் அவ்வளவு இளம் வயதில்? அவர் இறந்ததைக் கேட்டு அவர் மனைவியும் குழந்தைகளும் எவ்வளவு துன்பமும் அடைந்திருப்பார்கள்? இந்த கண்டிராக்டரின் கதையை எழுதினால் எவ்வளவு நன்றாயிருக்கும்? என்று எண்ணினேன்.

"கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவார்களா? நீங்கள் தங்கி யிருக்கிறீர்களே, அந்த வீட்டு அம்மாளையே கேளுங்களேன்! முதலியாரைப் பற்றி விவரங்கள் அவனவும் ஒருவேளை கிடைக்கலாம்" என்றார் முடிவில் உபாத்தியாயர்.

## 2

கிளப்புக்குத் திரும்பினதும் கற்பகத்தம்மாள் எங்கே என்று தேடினேன். வீட்டின் பின்புறத்திலுள்ள மகிழ மரத்தடியில் கற்பகத்தம்மாள் உட்கார்ந்து கொண்டு கனகாம்பரப் பூவைத் தொடுத்துக் கொண்டிருந்தாள். அவளருகில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த சூடாமணி என்னைக் கண்டதும் திடுக்கிட்டு எழுந்து உள்ளே போய் விட்டாள்.

"அம்மா! மன்னிக்க வேண்டும். உங்களை ஒரு விஷயம் கேட்கிறேன். கண்டிராக்டர் சோமசுந்தர முதலியாரைப் பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?" என்றேன்.

சோகம் படர்ந்திருந்த கற்பகத்தம்மாளின் முகத்தில் திடீரென்று விவரிக்க இயலாத ஒரு கலவரம் உண்டாயிற்று. என்னைச் சுட்டெரித்து விடுபவன்போல் பார்த்தாள்.

"எதற்காக இதெல்லாம் என்னைக் கேட்கிறீர்கள்?" என்று கேட்டாள்.



"அம்மா! நான் கதை எழுதுகிறவன். சோமசுந்திர முதலியாரைப் பற்றித் தெரிந்தால் ஒரு கதை எழுதலாம் என்று உத்தேசம். அதனுல்தான் கேட்கிறேன்" என்றேன்.

நான் அப்படிச் சொன்னபோது கற்பகத்தம்மாளின் முகத்தில் தோன்றிய மாறுதல்களைக் கண்டதும் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. குபீரென்று அவள் முகத்தில் கண்ணீர் பீறிக்கொண்டு வரப் பார்ப்பானேன்?

"என்னை ஒன்றும் கேட்காதீர்கள். உங்களுக்கு ரொம்ப புண்ணியம் உண்டு; போங்கள்" என்ருள் அந்த அம்மாள்.

நான் மேலே பேசாமல் வீடு திரும்பினேன்.

முதலியாரைக் கேட்டு விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாமென்று எண்ணினேன். ஆனல் சாயந்திரம் வெளியே சென்ற முதலியார் இன்னும் திரும்பி வரவில்லையாதலால் மறு நாள் காலையில் எழுந்ததும் முதன் முதலில் இதைப் பற்றி அவரைக் கேட்க வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டேன்.

அன்று இரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. முதலியார் பாலத்தைப் பற்றி எல்லாரும் மர்மமாகப் பேசுவதைப் பற்றி எண்ணியபோது அப்படியென்ன சொல்லக் கூடாத விஷயம் நடந்திருக்கும் என்று தோன்றிற்று. என் அருகே யாரோ பெருமூச்சு விடும் சப்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தேன். என் அறையில் இருட்டாக இருந்தபடியால் கண்ணைக் கசக்கிக்கொண்டு பார்த்தேன். யாரோ உள்ளம் குமுறி அழுவதுபோல் தோன்றிற்று.

"சத்தம் போடாதீர்கள்! நான்தான் கற்பகம்! இங்கே கூடத்திற்கு வாருங்கள்! ஒரு ரகசிய சமாசாரம்" என்ருள். அப்பொழுது அவள் குரல் மிகவும் கம்மியிருந்தது. என் மார்பு 'திக் திக்'கென்று அடித்துக் கொள்ள, அவளைத் தொடர்ந்து சென்றேன்.

கூடத்தில் தீபம் மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. கூடத்திலிருந்த ஊஞ்சலில் என்னை உட்காரச் சொன்ஞள் கற்பகத்தம்மாள.

"நீங்கள் முதலியாரைப் பற்றிக் கதை எழுதுவதாகச் சொன்னீர்களல்லவா? அவரைப் பற்றிச் சொல்லுவதற்காகத் தான் கூப்பிட்டேன். அவர் உயரமாக இருப்பார். அவர் முகத்தில் எப்பொழுதும் புன்சிரிப்பு குடி கொண்டிருக்கும். சுருட்டை சுருட்டையான மயிர். இதையெல்லாம் கதையில் எழுதி விடுங்கள். அந்தக் கதையையாவது படித்து நான் அவரை மறக்காமல் ஆனந்தப் பட்டுக் கொண்டிருப்பேனல்லவா?" என்ருள்.

என் மனதில் திடீரென்று ஒரு சந்தேகம் உண்டாயிற்று.

"மன்னிக்க வேண்டும். அவருக்கும் உங்களுக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா?" என்று கேட்டேன்.

"முதலில் எங்கள் இரண்டு பேருக்கும் சம்பந்தம் ஒன்றும் கிடையாது. ஆனல் ஊரில் எங்கள் இரண்டு பேரையும் சம்பந்தப் படுத்தி விட்டார்கள். பாலம் கட்டுவதற்காக அவர் இந்த ஊருக்கு வந்ததும் இந்த ஹோட்டலில்தான்



தங்கினார். அப்பொழுது என் தகப்பனார் இறந்து ஒரு வருஷம் ஆகி யிருந்தது. சூடாமணி சின்னப் பெண். நாலைந்து பேர்களுக்குச் சாப்பாடு போட்டுக் கொண்டு ஹோட்டலை நான் நடத்திக் கொண்டிருந்தேன். செங்கல்பட்டார் வந்துசேர்ந்த நாளிலிருந்து கண்டகண்ட வதந்திகளெல்லாம் ஊரில் பரவ ஆரம் பித்தன. என் பரிதாப நிலையைப் பார்த்து விட்டு என்னைக் கல்யாணம் செய்து கொண்டு விடுவதாக அவர் சொன்னார். என் விருப்பமும் அதுவாக இருக்கவே, நானும் சம்மதித்தேன். கல் யாணத்திற்குப் பத்து நாள் இருக்கும் போதுதான் அவர் திடீரென்று இறந்து போனார்'' என்று சொல்லும்போது அவள் கண்ணில் நீர் பெருகியது.

"அதற்குப் பிறகுதான் வீரபத்திர முதலியாரைக் கல்யாணம் செய்து கொண்டீர்களாக்கும்?"

"ஆமாம். ரொம்ப நாளாகவே கல் யாணம் செய்துகொள்ளும்படி என்னைக் கழுவாய்க் கரைத்துக்கொண்டிருந்தார். நானோ அநாதை. ஆகையால் எல்லாம் தெரிந்தே இவர் வீசின வலையில் விழுந்தேன்."

இந்த சமயத்தில் ஏதோ காலடிச் சத்தம் கேட்டாற்போல் இருந்தது. ஊன்றிக் கவனித்தேன். ஒன்றையும் காணோம். மனப் பிரமைதான் போலிருக்கிறது என்று சமாதானம் செய்து கொண்டு கற்பகத்தம்மாள் மேற் கொண்டு சொல்லியதைக் கவனித்தேன்.

"நான்தான் படுகுழியில் விழுந்து விட்டேன். குழந்தை சூடாமணியாவது சௌக்யமாக இருக்கும்படி நீங்கள் ஒரு வழி செய்யவேணும். அவளை யாரோ ஒரு கிழவனுக்குக் கலியாணம் செய்து கொடுத்துப் பணம் சம்பாதிக்க இவர் ஏற்பாடு செய்து கொண்டிருக் கிறார். நீங்கள் சூடாமணியை உங்கள் ஊருக்கு அழைத்துக் கொண்டு போய் விடுங்கள். உங்கள் வீட்டில் வேலைக் காரியாகவாவது அவளை வைத்துக் கொள்ளுங்கள்'' என்று நான் கொஞ் சமும் எதிர்பாராத அதிர் வெடியைத் தூக்கிப் போட்டாள் கற்பகத்தம்மாள்.

கதை எழுத வந்தேனா அல்லது நானே கதா நாயகனாக வந்தேனா என்று எனக்குச் சந்தேகம் ஏற்பட்டது.

"அவசரப் படாதீர்கள்! யோசித்து நாளைக் காலையில் சொல்லுகிறேன்'' என்று சொல்லிவிட்டு நான் படுக்கைக் குச் சென்றேன்.

மேற்கண்ட சம்பாஷணைக்குப் பிறகு எப்படித் தூக்கம் வரும்?

## 3

மறுநாட் காலையில், கற்பகத்தம்மா ளுடன் பேசி, அன்றிரவுச் சூடாமணி யுடன் வெளியேறுவதற்கு சகல ஏற்பாடுகளும் செய்தாகி விட்டது. ஆனால், புறப்படுவதற்குமுன் கண் டிராக்டர் உயிர் விட்ட இடத்தை ஒரு தடவை பார்த்து விட்டால் கதையில் சரியாக வர்ணிக்க முடியுமென்று நினைத்தேன்.

வாசலில் வீரபத்திர முதலியார் பெஞ்சியில் உட்கார்ந்திருந்தார்.

"எங்கே இருட்டில் கிளம்பு கிறீர்கள்?" என்று கேட்டார்.

"அதிகதூரம் இல்லை; முதலியார் பாலம் வரையில் போய் வருகிறேன்" என்றேன்.

"நானுந்தான் வருகிறேனே?" என்று அவரும் புறப்பட்டு வந்தார்.

ஏதாவது பேச வேண்டுமே என்ப தற்காக, "கண்டிராக்டர் சோமசுந்தர முதலியாரை உங்களுக்குத் தெரியுமோ? அந்தப் பாலத்தில் விழுந்து செத்துப் போனாராமே?" என்றேன்.

"ஆமாம், பாவம்! சோமசுந்தரத்தை எனக்கு வெகு நன்றாகத் தெரியும். இந்த ஹோட்டலில்தானே அவர் முன்பு தங்கி யிருந்தார்? அவரைப் பற்றி வேண்டு மானால் உங்களுக்கு எல்லா விவரமும் சொல்கிறேன்" என்றார்.

இருவருமாக, செடி கொடிகளைத் தாண்டிக் கொண்டே இரண்டு பர்லாங்கு தூரம் சென்றோம். கடைசி யில் பாலத்தருகில் வந்து சேர்ந்தோம். "சோமசுந்தரம் இருந்தபோது அங்கே யெல்லாம் ஒரே காடாக இருந்தது. அந்த இடத்தில் பிரும்மாண்டமான ஆலமரம்! இங்கே ஒரு மணல்மேடு!" என்று சுட்டிக் காண்பித்துக் கொண்டே வந்தார் முதலியார்.

"கேளுங்கள்! அப்பொழுது கிட்டத் தட்டப் பாலத்தைக் கட்டி முடிக்கும் சமயமாக இருந்தது. அந்த இரவு வேளையில் 'காஸ்லைட்'டைப் போட்டுக் கொண்டு கீழே வேலையாட்கள் 'ஸிமென்ட்' பூசிக் கொண்டிருந்தார் கள். அப்பொழுது 'ஹோ'வென்ற பேரிரைச்சலுடன் மழை பெய்ய ஆரம்பித்தது. நானும் முதலியாரும் இதே இடத்தில் தான் நின்று கொண் டிருந்தோம்" என்று சொல்லிக் கொண்டே வந்த முதலியார் "அதோ பாருங்கள்! கீழே இந்த மாதிரிதான் அப்பொழுதும் பெருவெள்ளம் போய்க்

"கொண்டிருந்தது" என்று கீழே சுட்டிக் காண்பித்தார்.

நான் பாலத்தின் கீழே குனிந்து பார்த்தேன்! எனக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த வீரபத்திர முதலியார் திடீரென்று "ஹா, ஹா, ஹா" என்று கோரமாகச் சிரித்ததைக் கேட்டு எனக்குக் குலை நடுங்கிற்று. அடுத்த விநாடி, "இப்படித்தான் அந்தக் கண்டிராக்டர் விழுந்தான்; தெரிந்து கொண்டாயல்லவா?" என்று தலை குப்புற என்னைத் தள்ளி விட்டார்.

ஆற்று வெள்ளத்துடன் நான் போராடிக் கொண்டிருந்தபோது, கனவில் கேட்பதுபோல் பின்வரும் வார்த்தைகள் இலேசாகக் கேட்டன :—

"முன்பு கற்பகத்தை என்னிடமிருந்து திருடினவன் இப்படித்தான் விழுந்தான். இப்பொழுது சூடாமணியைத் திருட நினைக்கிறவனும் இப்படித்தான் விழுகிறான். நான் என்ன செய்யட்டும்! அடேய்! உன்னைப்போல் எவ்வளவு போலீஸ்காரர்கள் வந்தும் அவர்கள் ஜம்பம் சாயவில்லை. கதை எழுதுகிறேன் என்று வேஷம் போட்டுக் கொண்டு இருளன்பட்டி வீரபத்திர முதலியாரிடமா உன் கை வரிசையைக் காண்பிக்கிறாய்?" என்று சொல்லிக் கொண்டே மேலும் அந்தக் கொலைகாரன் சிரித்தான்.

நான் உண்மையில் கதாசிரியன்தான் என்பது முதலியாருக்கு எப்படித் தெரியவில்லையோ, அதேமாதிரி எனக்கு நன்றாய் நீந்தத் தெரியும் என்பதும் அவருக்குத் தெரியவில்லை. எனவே, அவர் எதிர்பாராத விதமாக, நான் தப்பிப் பிழைத்துப் பட்டணம் வந்து சேர்ந்தேன்.

"சோமசுந்தர முதலியாரின் கதையை விட நீங்கள் தப்பி வந்ததே ஆச்சர்யமான கதையாக இருக்கிறதே" என்று என் மனைவி சௌந்திரம் சொன்னதின் பேரில் மேற்படி சம்பவத்தையே இதோ எழுதி விட்டேன். சௌந்திரத்தின் அபிப்பிராயத்தை இப்பொழுது சென்னையில் ஒரு அனாதை ஆசிரமத்தில் வசிக்கும் கற்பகத்தம்மாளும் சூடாமணியுங் கூட ஒப்புக் கொள்கிறார்கள்.

வீரபத்திர முதலியாரைக் கேட்டாலும் அப்படித்தான் சொல்வார். ஆனால் அவரை இப்பொழுது ஜெயிலில் பார்க்க முடியுமா? கொலைக் குற்றத்திற்காக சர்க்கார் விருந்தாளியாக இருந்துவரும் வீரபத்திர முதலியாரை யார்தான் ஜெயிலில் பேட்டி காண முடியும்?

*அரை நிமிஷக் கதை*

# விஷயம் புரிந்தது!

"ஸோமாஸ்"

"பம்பாய்க்குப் போன பிறகுகூடத் தமிழில் பேசாதீர்கள்! ஹிந்தியில் பேசக் கற்றுக் கொள்ளுங்கள். ஹிந்தி படித்துக் கற்றுக் கொள்வதைவிடப் பேசிக் கற்றுக் கொள்வதுதான் சுலபம். தெரிந்த வார்த்தைகளைக் கொண்டு முதலில் பேச ஆரம்பிக்க வேண்டும்!" என்று பங்கஜம், சிவராமன் பம்பாய்க்குப் புறப்படுவதற்குள் நூறு தடவையாவது சொல்லியிருப்பாள்.

பம்பாய் போனதும் சிவராமன் வேலையை ஒத்துக் கொண்டு, ஒரு ஹோட்டலில் தங்கினான்; ஒரு வடக்கத்திப் பையனைச் 'சோக்கரா'வாக ஏற்படுத்திக் கொண்டான்.

சென்னையில் இருந்தவரையில் சிவராமன் ஒரு சாயபுவின் கடையில் மளிகை சாமான்கள் வாங்கிக் கொண்டிருந்தான். அங்கே அரைகுறையாகக் காதில் விழுந்த ஹிந்திப் பதங்கள் பம்பாயில் மிகவும் பயன் பட்டன.

அந்த வேலைக்காரப் பையனுடன் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்ததும், சிவராமன், "கானா காயா?" என்று கேட்டான். ஹிந்தியில் பேசுகிறோம் என்னும் பெருமிதம் அவன் முகத்தில் தோன்றாமலில்லை.

அதற்கு அந்தப் பையன், "நம்பள்கி சாப்பிட்டாயில்லே, நாஸ்தா சாப்பிட்டான்?" என்று ஹிந்தி கலந்த தமிழில் பதில் சொன்னான்.

பிறகு சிவராமன் "மத்ராஸிவாலா பஜார் கிதர் ஹை?" என்று தனக்குத் தெரிந்த ஹிந்திப் பதங்கள் அவ்வளவையும் உபயோகித்துக் கேட்டான்.

"மட்டுங்கா மத்ராஸி பஜார் இருக்கான்!" என்று பையனும் தனக்குத் தெரிந்த தமிழ்ப் பதங்களை விளாசினான்.

"போஸ்டாபீஸ் ஜாதா ஹாய்?" என்று சிவராமன் அந்தப் பையனைப் பார்த்துக் கேட்டான்.

"மைம் போஸ்டாபீஸ் போறேன்!" என்றான் பையன்.

சிவராமன் எத்தனையோ தடவை அவனை ஹிந்தியில் பேசச் சொல்லியும் பயனில்லை. அவனும் 'கட்டாயப்படுத்துவதை விட்டு விட்டான். மூன்று மாதங்கள் சென்றதும் சிவராமனைச் சென்னைக்கு மாற்றி விட்டார்கள். அந்த வேலைக்காரப் பையனும் சிவராமனுடன் சென்னைக்கு வந்தான்.

சிவராமன் நன்றாக ஹிந்தி கற்றுக் கொண்டிருப்பானென்று பங்கஜம் நினைத்தாள். அவன் பையனைப் பார்த்து, "பானி கொண்டுவா!" என்றதும்தான் அவளுக்கு விஷயம் புரிந்தது. "இப்படி என்னத்துக்குக் கதம்பமாகப் பேசறேள்? ஹிந்தியிலேயே பேசுவதற்கென்ன?" என்றாள்.

அதற்குள் பையன், "பானி—நம்பள்—வாசல் வச்சிருக்கான்!" என்றான்.

பங்கஜம், "ஹிந்தியில் பேசுவதற்கென்னடா, பையா?" என்று அதட்டினாள்.

உடனே, பையன் "நம்பள்கி அம்மா நம்பளைத் தமிள் படிக்கச் சொன்னான்" என்றான்.

பங்கஜத்துக்கு, சிவராமனும் அந்தப் பையனும் கதம்ப பாஷையில் பேசுவதன் காரணம் இப்பொழுதுதான் புரிந்தது.

# சமுத்திர லோகத்தில்

"நாடோடி"

[சமுத்திர லோகத்தில் சமுத்திர ராஜன் தர்பார். சமுத்திர ராஜன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறார். எதிரே சபையில் மந்திரிகள், பிரதானிகள் முதலியோர் வீற்றிருக்கின்றனர். சபையோர் முகங்களில் காணப்படும் ஆவலையும், துடிதுடிப்பையும் காணும் போது அன்று ஏதோ ஒரு பெரிய விஷயத்தை விவாதிப்பதற்காகக் கூடியவர்கள் போல் தோன்றுகிறது.]

**ராஜன்** :—அப்பா! என்ன வெய்யில் கொளுத்துகிறது? யார் அங்கே! நம் தாதியை விசிறியை எடுத்துக் கொண்டு வரச் சொல்.

[ஒரு தாதி விசிறி கொண்டு வந்து அரசனுக்கு விசிறுகிறாள்.]

எங்கே, நம் பிரதம மந்திரியைச் சபையிலே காணோம்?

**பொக்கிஷ மந்திரி** :—அவர் ஜலதோஷத்தால் அவஸ்தைப் படுவதால் இன்று சபைக்கு வரவில்லை.

**ராஜன்** :—அடிக்கடி ஜலத்தில் நனையாதேயும் என்று நாம எவ்வளவு சொல்லியும் அவர் கேட்கவில்லை. மிகவும் முக்கியமான ஒரு விஷயத்தை விவாதிப்பதற்காகக் கூடியிருக்கும் இன்றைய தினம் அவர் ஆஜராகாதது எனக்கு மிகவும் வருத்தமாய் இருக்கிறது.

**மற்ற மந்திரிகள்** :—பரவாயில்லை, அரசே! நாங்கள் இருக்கிறோம். தாங்கள் தர்பாரை ஆரம்பித்து வைக்கலாம்.

[சமுத்திரராஜன் தமது மச்சாஸனத்தை விட்டு எழுந்து நிற்கிறார்.]

**ராஜன்** :—என் மதியூக மந்திரிகளே! சபையோர்களே! நான் இன்று தர்பார் கூட்டியதன் காரணத்தை நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். இப்பவும் பூலோகத்தில் யுத்தம் ஆரம்பித்தாலும் ஆரம்பித்தது. இப்பூலோக வாசிகள் தினம நமக்குக் கப்பல கப்பலாக உணவுப் பொருள்கள், இயந்திர சாமான்கள், காகிதம், கச்சா பிலிம் ஆக இப்படி எத்தனையோ சாமான்கள் அனுப்பி வருகிறார்கள். ஏதோ நாம் செய்த புண்ணியந்தான், இருபத்தைந்து வருஷ காலத்துக்குப் பிறகு இப்பூலோக வாசிகள் திரும்பவும் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள்; நமக்கும் கப்பல் கப்பலாகப் பொருள்கள் கிடைத்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் இப்பூலோக வாசிகள் இப்படியே இருப்பார்கள் என்று நாம் நம்பக் கூடாது. இருந்தாற் போலிருந்து அவர்களுக்குப் பைத்தியம் தெளிந்து விடலாம். அவர்கள் யுத்தத்தை நிறுத்தி விடலாம். அப்பொழுது கப்பல்கள் நம் உலகத்தைத் தேடி வந்து கொண்டிருப்பது நின்று விடக் கூடும். ஆகவே நம்மைத் தேடி வந்துள்ள சரக்குகளையெல்லாம் நாம் சரிவர உபயோகிப்பதற்கு ஏதாவது முன் கூட்டியே திட்டம் வகுக்க வேண்டியது அவசியம். இது விஷயமாக உங்கள் எல்லாரையும் கலந்து பேசுவதற்காகத்தான் சபை கூட்டியிருக்கிறேன்.

**இரண்டாவது மந்திரி** :—அரசே! தங்கள் கூற்றை நாங்கள் எல்லாரும் ஆமோதிக்கிறோம். ஏதாவது ஒழுங்கான ஏற்பாடு பண்ண வேண்டியது மிகவும் அவசியமே. ஏனெனில் —

[ஒரு சேவகன் வந்து தண்டனிட்டு நிற்கிறான்.]

என்ன?

**சேவகன்** :—மகாப் பிரபு! ஒரு கப்பல் நிறைய உணவுப்பதார்த்தங்கள் வந்து சேர்ந்திருக்கின்றன. அது விஷயமாகத் தங்கள் ஆக்ஞை!

[இன்னொரு சேவகன் வருகிறான்.]

**மந்திரி** :—என்ன?

**இரண்டாவது சேவகன்** :—மகாப் பிரபு! இரண்டு கப்பல்கள் நிறைய கச்சா பிலிம் வந்து சேர்ந்திருக்கிறது. அது விஷயமாகத் தங்கள் ஆக்ஞை!

[மூன்றாவது சேவகன் வருகிறான்.]

**மந்திரி** :—என்ன?

**மூன்றாவது சேவகன்** :—மகாப் பிரபு! மூன்று கப்பல்கள் நிறைய மோட்டார் வாகனங்கள் வந்து சேர்ந்திருக்கின்றன. அது விஷயமாகத் தங்கள் ஆக்ஞை!

[நான்காவது சேவகன் வருகிறான்.]

**மந்திரி** :—என்ன?

**நான்காவது சேவகன்** :—மகாப் பிரபு! நான்கு கப்பல்கள் நிறையக்

காகிதம் வந்து குவிந்திருக்கிறது. அது விஷயமாகத் தங்கள் ஆக்ஞை!

**அரசன்** :—என்ன மந்திரியாரே! இப்படிச் சாமான்கள் வந்து குவிந்து கொண்டிருந்தால் அவற்றை யெல்லாம் எங்கே வைப்பது, என்ன பண்ணுவது? உணவு வகைகளை வேண்டுமானல் ஜனங்கள் எல்லாருக்கும் பகிர்ந்து கொடுக்கலாம். ஆனல் இந்தக் காகிதம், கச்சா பிலிம், மோட்டார் வாகனங்கள் இவற்றை வைத்துக்கொண்டு என்ன செய்வது?

[சேவகன் ஒருவன் வருகிறன்]

**அரசன்** :—என்ன சமாசாரம்?

**சேவகன்** :—அரசே! பூலோகவாசி யொருவர் தங்களைக் காண்பதற்காக வந்திருக்கிறர்.

**அரசன்** :—பூலோகவாசியா? பூலோக வாசிக்கு இங்கு என்ன வேலை? வரச் சொல், பார்க்கலாம்.

[சேவகன் பூலோகவாசி யொருவரை அழைத்து வருகிறன்]

**பூ. வாசி** :—அரசே! நமஸ்காரம்.

**அரசன்** :—தாங்கள் யார்? என்னை நாடி வந்த காரணம் என்ன?

**பூ. வாசி** :—அரசே! பூலோகத்தில் தற்சமயம் கிடைப்பதற்கு அரிதா யிருக்கும் அநேக பொருள்கள் தங்களிடம் இருப்பதாகக் கேள்வியுற்று அவற்றை யாசித்துப் பெறலாம் என்று வந்தேன்.

**அரசன்** :—என்ன பொருள்கள்?

**பூ. வாசி** :—அரசே! தானிய வகைகள் நிறையக் குவித்து வைத்திருக்கிறீர்களே, அதில் கொஞ்சம் கொடுத்தால் . . .

**மந்திரி** :—அரசே! இவருக்கு ஒரு மணி தானியம் கூடக் கொடுக்கக் கூடாது. உணவுப் பொருள்களை இவரிடம் கொடுத்தால், அவற்றை ஒளித்து வைத்து, உயர்ந்த விலைக்கு விற்று ஊரைக் கொள்ளையடிக்கப் பார்ப்பார்.

**பூ. வாசி** :—சரி, நிறைய மோட்டார் வாகனங்கள் சேமித்து வைத்திருக்கிறீர்களே, அவற்றிலாவது நாலைந்து கொடுங்கள்.

**மந்திரி** :—அரசே! இதுவும் தர முடியாதென்றே நினைக்கிறேன். இந்த மோட்டார் வாகனங்கள் சில நம்மிடம் சிக்கிக் கொண்ட படியால்தான், பூலோகத்துப் பாதசாரிகளில் சிலர் இன்னும் உயிர் பிழைத்திருக்கின்றனர்!

**பூ. வாசி** :—சரி, கச்சா பிலிம் கத்தை கத்தையாக வைத்திருக்கிறீர்களே, அதாவது ஒரு பத்து லட்சம் அடி கொடுக்கக் கூடாதா?

**மந்திரி** :—அரசே! அதுவும் நம்மால் கொடுக்க முடியாது. இந்தக் கச்சா பிலிமை வைத்துக் கொண்டு நம் ஜனங்களின் அறிவை விருத்தி செய்யும் சினிமாப் படங்கள் பிடிக்கலாம். இவரிடம் கொடுத்தால் 11,000 அடி படம் பிடிப்பதற்கு 11 லட்சம் அடி பிலிமை வீணாக்கி விடுவார். அப்படித்தான் நல்ல படம் ஏதாவது பிடிப்பார் என்று நினைக்கிறீர்களா? மாட்டார். இப் பூலோக வாசிகள், அதிலும் சில சினிமாப் பட முதலாளிகள் கீழான ஜனங்களின் மிருக இச்சைகளைத் தங்களுக்கு அனுகூலமாகப் பயன்படுத்திக் கொள்வதில்



பல கெட்டிக்காரர்கள். இவர்கள் பிடிக்கும் படங்களில் ஸ்திரீ நடிகர்களுக்கு ஆடைச் செலவே இருக்காதென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

**பூ. வாசி** :—போகட்டும். இங்கே நிறையக் காகிதம் குவிந்திருப்பதாகத் தெரிகிறது. ஒரு ஐம்பது டன் காகிதமாவது கொடுக்கலாமா?

**அரசன்** :—காகிதத்தைக் கொண்டு என்ன செய்வீர்?

**பூ. வாசி** :—பத்திரிகை போடலாமென்று உத்தேசம்.

**மந்திரி** :—அரசே! கூடவே கூடாது. பூலோகத்திலே பத்திரிகை போடுகிற இலட்சணம் எனக்குத் தெரியும். யுத்தம் செய்வது போதாதென்று, பத்திரிகைகளை யுத்தச் செய்திகளைக் கொண்டே நிரப்பி விடுவார்கள். போதாதற்கு கொலை, களவு, விபசாரம், கோர்ட் வழக்கு முதலிய செய்திகள். யுத்த விமரிசனங்கள் வேறு. அப்புறம் பொய், புளுகு சுருட்டு விளம்பரங்கள். இங்கேயே நல்ல இலக்கிய விஷயங்கள் கொண்ட பத்திரிகை நடத்தலாம். இவரிடம் காகிதத்தைக் கொடுத்தால் தூர் விநியோகந்தான்.

**பூ. வாசி** :—அரசே! இப்படி நான் கேட்கும் ஒவ்வொரு பொருளையும் மறுத்தால் நான் என்ன செய்வது? கடைசியாக ஒரு பொருள் கேட்பேன். அதுவாவது கொடுப்பீர்களா?

**அரசன்** :—என்ன அது?

**பூ. வாசி** :—தங்களுடைய லோகத்தில் திமிங்கிலம் இருக்கின்றதல்லவா? அதன் வயிற்றுக்குள் ஸீல் போட்ட கவர் ஒன்று வைத்திருக்கிறது ....

**அரசன்** :—திமிங்கிலத்தின் வயிற்றில் ஸீலாவது, கவராவது! எனக்கு ஒன்றும் புரியவில்லையே, விவரமாகச் சொல்லும்.

**பூ. வாசி** :—எங்கள் லோகத்தில் எவ்வளவோ பள்ளிக்கூடங்கள், காலேஜுகள் எல்லாம் இருந்த போதிலும், எங்களுக்குப் பகுத்தறிவு விருத்தியாகவில்லை. இந்தக் குறையை நிவர்த்தி செய்யும் நோக்கத்துடன் சிலர் தங்கள் சிரமத்தையும் பாராட்டாது பகுத்தறிவுப் போட்டிப் பந்தயங்கள் நடத்தி வருகிறார்கள். நாங்களும் அறிவை விருத்தி செய்து கொள்வதற்காக இன்ஸால்வென்ட் ஆவதைக்கூட லக்ஷ்யஞ் செய்யாமல் அவற்றில் கலந்து கொள்கிறோம். அந்தப் போட்டிப் பந்தயத்தின் சரியான விடையைப் பத்திரமாக ஒரு ஸீல் போட்ட கவரில் வைத்து திமிங்கிலத்தின் வயிற்றில் வைத்து விடுகிறார்களாம். அந்த விடை தெரிந்தால் முதல் பரிசைத் தட்டிக்கொண்டு போய் விடலாமென்று பார்க்கிறேன். ஒரு தடவையாவது முதல் பரிசு பெற்றால் தான் நான் நிம்மதியாகச் சாக முடியும்.

**அரசன்** :—சரி. ஆனால் முதல் பரிசு உமக்குத்தான் கிடைக்கும் என்பது என்ன நிச்சயம்?

**பூ. வாசி** :—என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? திமிங்கிலத்தின் வயிற்றில் வைக்கப்பட்டிருக்கும் அந்த விடை வேறு ஒரு பிராணிக்குத் தெரியாது ...

**அரசன்** :—அந்த விடையை வைத்தவருக்குக் கூடத் தெரியாதோ?

**பூ. வாசி** :— அட ஈஸ்வரா! இத்தனை நாளாக இது விஷயம் என் மூளையில் படவில்லையே! சரி, சரி. நான் சென்று வருகிறேன். அதற்கு முன்னர் ஒரு டம்ளர் தீர்த்தமாவது கொடுப்பீர்களா? மிகவும் தாகமாய் இருக்கிறது.

**அரசன்** :—யார் அங்கே? இவருக்கு ஒரு டம்ளர் உப்பில்லாத சுத்த ஜலம் கொடுத்து அனுப்பு.

திரை

தொடர்கதை

# உறைந்த வயல்

து. ரா.

● ● ● கதைப் போக்கு: பாவம்! பால்யத்திலேயே கணவனை இழந்து, மைத்துனர்களால் நடுத் தெருவில் விடப்பட்ட அபலையான மதுரத்தின் மீது சர்மா இரக்கங் கொண்டு அவளைத் தன் பெண் சுசீலாவுக்குச் சமையற்காரியாக அமர்த்துகிறார். ஆனால் சுசீலா அவளைத் தன் சொந்த சகோதரி போலவே பாவித்து மரியாதையுடன் நடத்துகிறாள். சுசீலாவின் கணவன் தங்கமணியும் மதுரத்தினிடம் மிகவும் நேர்மையுடன் நடந்து கொள்ளுகிறான். இருந்தாலும் ஊர் வாயை மூட முடியுமா? மதுரத்தைப் பற்றி அக்கப்போர்கள் கிளம்புகின்றன; புரளிகள் பறக்கின்றன. நடுவில் சினிமா காமெடியன் மாஸ்டர் பஞ்சு வேறு குறுக்கிட்டு விஷயங்களைச் சிக்கலாக்கி விடுகிறான். இந்த அம்சங்களை யெல்லாம் து. ரா. தமது சரளமான நடையில் நமக்குப் படம் பிடித்துக் காண்பிக்கிறார். கதை போகப் போக ரொம்ப ரொம்ப சுவாரஸ்யமாவதைக் காணலாம்.

## எட்டாம் அத்தியாயம்

## காமெடியன் பஞ்சு

சாந்தி நகர் ரிப்பன் ரோட்டில் ஒரு மரம் அறுக்கும் ஆலை இருக்கிறது. முத்தையன் அந்த மரம் அறுக்கும் ஆலையில்தான் அதுவரையில் வேலையாய் இருந்தான். வேலையில் என்னவோ தவறு செய்து விட்டதற்காக அவனை நீக்கி விட்டார்கள். அப்புறம் சிலநாள் கடைத் தெருவிலே அரிசி மூட்டை தூக்கிப் பிழைத்துப் பார்த்தான். அந்த வேலை அவனுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. "மூட்டை தூக்கி முத்தையன்" என்று பெயர் கிடைத்ததுதான் மிச்சம். இனிமேல் வேறு எந்தத் தொழிலாவது செய்துதான் பிழைக்க வேண்டும். அவன் மனைவி சிங்காரம் சித்தாள் வேலை செய்து சம்பாதிக்கும் பணத்தை நம்பிக்கொண்டு உட்கார்ந்திருக்க முடியுமா என்ன?

இப்படி அவன் நினைத்துக் கொண்டு தன் குடிசை வாசலில் உட்கார்ந்திருந்த பொழுது தெருக் கோடியில் ஸைகிளில் வந்து கொண்டிருந்த ஓர் உருவத்தின் மேல் அவன் பார்வை விழுந்தது. அவ்வளவுதான்; முத்தையன் குபீரென்று வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருந்து குடிசைக்குள் சென்று "ஏய், அந்தப் பட்டாணித் துலுக்கன் வரான்!" என்றான்.

சிங்காரம் பரபரப்புடன் வந்து "வாரானா? அப்படினா ஓடு ஓடு!" என்று குடிசையின் கொல்லைப் புறத்தைக் காட்டினாள்.

முத்தையன் எடுத்தான் ஓட்டம். அந்தப் பட்டாணியனை நினைத்தாலே அவன் கதி கலங்கிற்று. அவனிடம் தெரியாத்தனமாய் நாலு மாசத்துக்கு முந்தி முத்தையன் ஒரு ஐந்து ரூபாய் கடன் வாங்கிவிட்டான். மாதம் ஒரு ரூபாயாக நாலு ரூபாய் கொடுத்தாகி விட்டது. அவனுக்கு வேலை போய் விட்டது என்று அறிந்த பட்டாணியன் மீதி 5½ ரூபாயையும், அந்த க்ஷணமே வைத்தால் தான் ஆயிற்று என்று பிடிவாதம் பிடித்து, கொடுக்காவிட்டால் அவனை அடிப்பதாகப் பயமுறுத்திக் கொண்டிருந்தான். ஆகையினால்தான் சிங்காரம் காட்டிய திசையில் ஓட்டம் பிடித்தான் முத்தையன்.

அந்த வீட்டுக் கொல்லைப்புறம் ஒரே தென்னந் தோப்பு. அதனுள் புகுந்து, அதற்கப்புறம் இருந்த முள்வேலியைத் தாண்டி சாந்தி நகர் ரெயில்வே ஸ்டேஷனண்டை வந்த பிறகுதான் முத்தையன் தாராளமாய் மூச்சுவிட்டான்.

அப்பொழுதுதான் ஒரு பெரிய அதிசயம் நடந்தது. முத்தையன் முன்

வேலியைத் தாண்டிக் குதித்த அதே சமயத்தில் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்தை அடைத்துக் கொண்டிருந்த இரும்புக் கிராதியைத் தாண்டி ஒரு மனித ஆத்மா வெளியே குதித்தது. அது இடுப்பில் மயில் கண் பட்டுக் கரை வேஷ்டி கட்டிக்கொண்டு, மேலே சில்க் ஜிப்பா அணிந்திருந்தது; சுருள் சுருளாய்க் கழுத்து வரையில் நீண்டு வளர்ந்திருந்த மயிருடன் கூடிய கிராப்புத் தலை. பாதி கன்னம் வரையில் நீளமாய் விடப்பட்ட 'கட்'.

இந்த அலங்காரங்களுடன் அந்த இளைஞன் பிளாட்பாரத்தை விட்டு முன் சொன்னபடி வெளியே வந்ததும் எதிரில் முத்தையனைக் கண்டு ஒரு கணம் திகைத்து நின்றான்.

முத்தையனுக்குப் பட்டாணியனிடம் இருந்த பயம் எல்லாம் போய் விட்டது.

"பயப்படாதிங்க சாமி! நான் ஒண்ணும் உங்களை டிக்கட் கேட்க மாட்டேன், பயப்படாதிங்க" என்றான் சிரித்துக் கொண்டே.

"நீ என்ன போர்ட்டரா?"

சொல்லி வைத்தாற்போல் முத்தையன் வாயிலிருந்து பொய் கிளம்பிற்று.

"ஆமாங்க; நீங்க டிக்கட் இல்லாமே தானே வந்திங்க?"

"டிக்கெட் இல்லாமே வந்தேனா? சேச்சே — வரவழியிலே டிக்கட்டை எங்கேயோ தாரை வார்த்து விட்டேன். அதைச் சொன்னால் இவன்கள் நம்புவான்களா? வைடா ரெட்டிப்பு சார்ஜு என்பான்கள். அதுக்காகத்தான் இங்கே ஒரு ஜம்பிங் வேலை காட்டவேண்டியதாய்ப் போய்விட்டது. இல்லாவிட்டால் என்ன? இந்தா, நாஷ்டாவுக்கு வச்சுக்கோ; பரவாயில்லை, இந்தா" என்று மணிபர்ஸிலிருந்து நாலணாவை எடுத்து முத்தையன் கையில் வைத்து விட்டு, முத்தையன் தாண்டிக் குதித்து வந்த முள் வேலியை நிதானமாகத் தாண்டிச் சவுக்குத் தோப்புக்குள் மறைந்தான்.

முத்தையன் அடைந்த ஆச்சரியத்திற்கு எல்லை இல்லை.

"அட! ஒரு கடன்காரனுக்கு டிமிக்கி குடுத்துட்டு வரத்துக்குள்ளே என்பாடு தகராறாய் விட்டது; இங்கே இத்தனை பேருக்குக் கடுக்கா குடுத்துட்டுப் போவுதே! இதுல்லே பொழைக்கிற புள்ளே" என்று அவன் பிரமித்து நின்றான்.

அந்த இளைஞன் யார் என்று தெரிந்திருந்தால் முத்தையன் அப்படிப் பிரமித்துப் போயிருக்க நியாயமில்லை. இந்த மாதிரி திடுக்கிடும் சம்பவங்களை மாஸ்டர் பஞ்சுவைப் போன்ற ஒரு ஸினிமா நட்சத்திரத்தினிடம் எதிர்பாராமல் வேறு யாரிடம் எதிர்பார்க்க முடியும்?



முத்தையனைத் திகைப்படையச் செய்து விட்டுச் சவுக்குத் தோப்புக்குள் நுழைந்த பஞ்சு, தோப்புக்குள் ஒருவரும் இல்லாமல் தனிமையாக இருந்தால் ஒரு ஹிந்துஸ்தானி பாட்டைப் பாடிக் கொண்டே குஷியாய் நடந்தான்.

பஞ்சு சிறிது நேரத்தில் தோப்பை விட்டு வெளிப்பட்டு ரிப்பன் ரோட்டுக்குள் பிரவேசித்தான். அப்பொழுது தான் முத்தையன் குடிசைக்கு எதிரில், முத்தையன் மனைவி சிங்காரத்திற்கும் அந்தப் பட்டாணியனுக்கும் நடந்து கொண்டிருந்த சண்டை உச்ச நிலையை அடைந்திருந்தது. பட்டாணியன் குடிசைக்குள் புகுந்து சாமான்களை எடுத்துக் கொண்டு போய் விடுவதாய்ப் பயமுறுத்திக் கொண்டிருந்தான்.

சிங்காரத்தைப் பார்த்து "எதுக்காகச் சண்டை?" என்று கேட்டான் பஞ்சு.



"கேளுங்க சாமி! நீங்களே கேளுங்க; எம் புருசன் இவன் மூஞ்சியைப் பாத்து இவங்கிட்டே அஞ்சு ரூபா கடன் வாங்கிச்சாம். அதிலே நாலு ரூவா குடுத்துப்புடிச்சு. மீதி அஞ்சரை ரூவா குடுக்கணும்னு இவன் சாதிக்கிறன். அது எப்படிங்க அஞ்சரை ரூவா ஆகும்? பெரிய அக்குரும்பா இருக்குதே இது! நீங்களே சொல்லுங்க" என்றாள்.

பஞ்சு பட்டாணியன் பக்கம் திரும்பி, "தேகோ இஸ்மெயில்கான்! அஞ்சு ரூபாய்லே நாலு ரூபாய் போனால் மீதி ஏக் ரூபாய்தானே?" என்றான்.

"இஸ்மெயில்கான் நை; ஜப்பார்" என்றான் பட்டாணி.

"அச்சா ஜப்பார்! மீதி ஒரு ரூபாய் தானே? வட்டி ரொம்ப ஜாஸ்தி!"

"ரொம்ப தாஸ்தி! க்யா தாஸ்தி! யார்து ரூபா? உனகி பாட்டன் ரூபா? அவன்கி எங்கே இருக்கான். இப்டி ஓட்றான் அவன்—" என்று சவுக்குத் தோப்பைக் காட்டினன்.

பஞ்சு அவன் காட்டின திக்கைப் பார்த்துவிட்டு விஷயத்தை உணர்ந்து கொண்டு ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். பிறகு, "எப்படியாவது சண்டை போட்டுக்கொண்டு மடியுங்கள், எனக்கென்ன?" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து நடந்தான்.

## ஒன்பதாம் அத்தியாயம்

### "நீங்களா அத்திம்பேரே?"

எட்டரை மணிக்கு நாராயணய்யர் மீனாக்ஷி ஸ்டோரிலிருந்து சாமான் வாங்கிக்கொண்டு வந்தார். வந்ததும் மனைவியிடம், "ஏண்டி, நாகராஜன் ஆத்துக்கு யாரோ ஒரு பெண் வந்திருக்கிறதே அது யார்?" என்று கேட்டார்.

"எந்தப் பெண்? எங்கே பார்த்தீர்கள்? அவர்கள் ஆத்துக்குப் போயிருந்தீர்களா என்ன?" என்றாள் ராஜம்மாள்.

"வரும்போது பார்த்தேன். அந்த ரோட்டுக் கிணற்றிலே தண்ணீர் மொண்டுகொண்டு போகிறது."

"அவள் தான் புதுசாய் வந்திருக்கிற சமையல்காரி."

"சமையல்காரியா? சின்னப் பெண்ணடி; பதினெட்டு வயதுகூட இருக்காது போலிருக்கிறதே? பார்த்தால் சமையல்காரி மாதிரி இல்லையே."

அதற்கு ராஜம்மாள், "அதை ஏன் கேட்கிறீர்கள்? அவள் டிரெஸ்ஸும் அவள் நடையும்! அடேயப்பா! இத்தனைக்கும் வாழாதது. கமலா அவளைச் சமையல்காரி மாதிரி வைத்திருக்கிறளா என்ன? என்னமோ ராஜாத்தி மாதிரிதான் நடத்துகிறள். போன ஜன்மத்திலே அவளுக்கு ஏதாவது கடன் பட்டிருந்தாளோ, என்னமோ! இப்பொழுது அது வந்து தண்டிக் கொண்டு போகிறது. அவள் கட்டிக் கொண்டிருக்கிற புடவையைப் பார்த்தீர்களா?" என்றாள்.

நாராயணய்யர், "பெரிய இடத்திலே பிறந்த பெண்ணாய்த் தோன்றுகிறது. இந்த வேலைக்கு லாயக்கில்லை. பார்க்கும் போதே தெரிகிறது" என்றார்.

"பெரிய இடமுமில்லை, ஒன்றுமில்லை. எப்படியாவது பணவிட்டால் போதுமென்று அப்பன்காரன் ஒரு கிழவன் கழுத்திலே இவளையானாய்க் கட்டிவிட்டான். உடனே அப்பனும் செத்தான், ஆம்படையானும் செத்தான் இது இப்படிச் சந்தியில் நிற்கிறது."

"இருந்தாலும் ரொம்ப சின்னப் பெண். பார்ப்பதற்கும் கிளி மாதிரி

இருக்கிறது. இப்படித் தன்னந் தனியாய் முன்பின் தெரியாத இடத்தில் வந்து இருப்பது நல்லதில்லை. நாலுபேர் நாலு சொல்வார்கள். தங்கமணிக்கு ஒன்றும் தெரியாது; அவளிடம் சொல்ல வேண்டும்'' என்றார்.

''நான் ஏற்கனவே சொல்லியாச்சு சுசீலாவிடம்: 'நீயும் சிறிசு, உன் ஆம்படையாளும் சிறிசு. இதைக் கொண்டு வந்து வீட்டிலே வைத்துக் கொண்டிருக்கிறாயே' என்று ஜாடையாய்ச் சொன்னேன். அவளுக்குத் தெரியவில்லை. 'எனக்குத் தான் யார் இருக்கிறார்கள்?' என்றாள். அப்புறம் நமக்கென்ன என்று பேசாமல் இருந்து விட்டேன். இதுகள்தான் அறியாததுகள், ஒன்றும் தெரியவில்லை. அந்தக் கிழம் வந்திருக்கிறதே அதற்கல்லவா தெரிந்திருக்க வேண்டும்? இவர்களே செய்தாலும் 'வேண்டாம்' என்று சொல்கிறது போக, அதுவே கொண்டு வந்து வைத்திருக்கிறதே'' என்றாள்.

நாராயணய்யர் அதற்குமேல் பேச்சை வளர்த்தவில்லை. சர்மாவைப் பற்றி அவர் மனதில் நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டிருந்தது. முன்னொரு ஞாயிற்றுக் கிழமை சர்மா ஆரிய சமாஜிகள் பொதுக் கூட்டம் ஒன்றில் பகவத் கீதையைப் பற்றிப் பிரசங்கம் செய்ததை அவர் கேட்டார். அப்பொழுது சர்மாவின் ஆழ்ந்த அறிவும், ஆத்மார்த்தமான தோற்றமும் அவரைப் பெரிதும் வசீகரித்தன. மதுரத்தை அவர் தம் தம்பியின் வீட்டில் கொண்டு வந்து வைத்தது அநுசிதமான காரியமாகவே அவருக்குத் தோன்றின போதிலும், அந்தக் கிழவர் இருக்கும் இடத்தில் விபரீதமான காரியம் ஒன்றும் நடவாது என்ற தைரியமும் அவர் மனதில் இருந்தது. ஆகவே மனைவியின் வார்த்தையில் அதிக கவனம் செலுத்தாமல், மணி பர்ஸிலிருந்து சில்லறை எடுத்துக் கொண்டு கடையிலிருந்து சாமான் தூக்கி வந்த ஆளுக்குக் கூலி கொடுப்பதற்காக வெளியே வந்தார்.

ரேழிக்குள் நுழையும் வாயிற்படியை அவர் தாண்டும்பொழுது திடீரென்று கதவு மூலையிலிருந்து ''ஹோ'' என்று ஒரு பெரிய இரைச்சல் கேட்டது. அடுத்த கணம் கைகளை அகல விரித்துக் கொண்டு அவர் மைத்துனன் பஞ்சு மறைவிடத்திலிருந்து அவரெதிரில் பிரசன்னமானான்! இரைச்சலைக் கேட்டதுமே நாராயணய்யர் திடுக்கிட்டுப் போய்ப் பின்னடைந்து கதவு நிலையில் தலையை 'டங்' என்று மோதிக் கொண்டார். அவரைப் பார்த்ததும் கலவரமடைந்தவனாய், அசடு வழியும் முகத்துடன், ''நீங்களா அத்திம்பேரே! நான் பட்டுதான் வருகிறாளாக்கும் என்று பார்த்தேன். இப்பத்தான் வந்தேன். சப்தம் கேட்டதும் பட்டு வாக்கும் என்று, பயங்காட்டலாம் என்று ஒளிந்து காண்டேன்; நீங்கள் வந்துட்டேள் —'' என்று உளறிக் கொட்டிவிட்டு, அவர் எதிரில் அதற்குமேல் நிற்க பயந்து ''எலே மணி! அடியே பட்டு!'' என்று அழைத்துக் கொண்டே உள்ளே சென்றான் பஞ்சு.

(தொடரும்)

---

## கவிச் சித்திர விளக்கம்

தில்லையம்பதியிலே பொன்னம்பலத்திலே ஆனந்தக் கூத்தாடும் நடராசப் பெருமானை ஒரு பெண் கண்டு காதல் கொண்டாள். எந்நேரமும் அவனுடைய கருணை பொழியும் திருமுகமும் ஆனந்தக் கூத்தும் அவள் உள்ளத்தைவிட்டு அகலவில்லை. அப்போது வீதியிலே ஓர் அழகிய ரிஷபத்தைக் கண்டாள். சிவ பெருமான் ரிஷப வாகனத்தில் வீதி வலம் வரும் காட்சி நினைவுக்கு வந்தது. ரிஷபத்தைப் பார்த்துச் சொல்லுகிறாள் :—

''ஆன் ஏறே! அந்த நடராசப் பெருமானை எந்நேரமும் சுமந்து கொண்டு போவாயே! சற்று இந்தப் பக்கம், என் தெருவழியாக வந்து, அவனை நான் மறுபடியும் கண்குளிரக் கண்டு ஆனந்திக்கும்படி செய்யலாகாதா? செய்து என்னை வாழ்விக்கக் கூடாதா?'' என்று வேண்டுவதாக பாவம்.

[ஆன் ஏறு: சிறந்த ரிஷபம்; போந்தால்: வந்தால்; வா மாண்: வான் அளாவிய சிறந்த; மன்று: பொன்னம்பலம்; கோமான்: நடராசப் பெருமான்.]

ஆனேறே போந்தால்
அழிவுண்டே? அன்புடைய
நானேதான் வாழ்ந்திடினும்
நன்றன்றே? வானோங்கு
வாமாண் பொழில்தில்லை
மன்றைப் பொலிவித்த
கோமானை இத்தெருவே
கொண்டு.

விச் சித்திரம்—15. —பட்டினத்தார்.





# பாப்பா மலர்



## பூனையை வென்ற எலி

[ ராஜி ]

ஒரு எலிக்கு நான்கு குழந்தைகள். அந்த நான்கு எலிக் குஞ்சுகளில் ஒரு எலிக் குஞ்சு மிகவும் பொல்லாததாக இருந்தது. ஆனால் அது மிகவும் சாமர்த்தியமாக நடந்து கொள்ளும். தன் தாயாரிடம் கூட அது சமத்துக் குஞ்சு என்று பெயர் வாங்கிற்று.

ஒரு நாள் அந்த எலிக் குஞ்சு தாயாரிடம் சென்று "அம்மா, அம்மா! வெளியிலேயே போய்க் கொஞ்சம் விளையாடி விட்டு வருகிறேன்" என்று சொல்லிற்று. அதற்கு அதன் தாயார் "நீ மிகவும் சின்னக் குஞ்சாயிற்றே. வெளியில் எங்கும் அதிகமாகப் போகாதே. இந்த பரணிலேயே கொஞ்ச தூரம் போய்த் திரும்பி வந்துவிடு" என்று புத்திமதி கூறி அனுப்பிற்று.

அம்மா சொன்னபடி கேளாமல் எலிக் குஞ்சு பரணைத் தாண்டி ஒரு உத்தரத்தின் வழியாகப் போக ஆரம்பித்தது. அவை குடியிருந்த அந்த வீட்டில் அப்பொழுது ஓரே சப்தமாக இருந்தது. உள்ளே ஓரே கும்பல். அது ஒரு கள்ளுக் கடை. எலிக் குஞ்சு உத்தரத்திலிருந்து எட்டிப் பார்த்தது. எட்டிப் பார்த்ததுதான் தாமதம்; திடீரென்று ஒரு பெரிய கள்ளுப் பானைக்குள் அது தவறி விழுந்தது. ஆனால் அதிர்ஷ்டவசமாக அந்தப் பானையின் அடியில் கொஞ்சந்தான் கள் இருந்தது. அதனால் எலிக் குஞ்சு தப்பித்து இங்கும் அங்குமாக பானைக்குள் சுற்றிச் சுற்றி வந்தது. அது பெரிய பானையானதால் அதனால் வெளியில் வர முடியவில்லை. இரவு வெகு நேரம் ஆயிற்று. பானையிலும் நிச்சப்தம் ஏற்பட்டது. எலிக் குஞ்சு என்ன செய்வது என்று தெரியாமல் விழிவிழி யென்று விழித்தது.



அச்சமயத்தில் யாரோ வருவது போல் ஓசைப்பட்டது. எலிக் குஞ்சு தன் தாயார்தான் வருகிறான் என்று நினைத்தது. தானிருக்கும் இடம் தன் தாயாருக்குத் தெரிய வேண்டுமென்று 'கிச் கிச்' என்று கத்திற்று. அக் குரலைக் கேட்டவுடன் அங்கிருந்த ஒரு பூனை பானைக்குள் எட்டிப் பார்த்தது. பூனையைப் பார்த்ததும் எலிக் குஞ்சின் உடல் நடுங்கிற்று. இருந்தாலும் தைரியத்தை அது கைவிடவில்லை.

பூனையைப் பார்த்து "பூனைப் பெரியாரே! என்னை இப்பொழுது கொல்லவா பார்க்கிறீர்?" என்று பார்



தாபக் குரலில் கேட்டது. எலிக் குஞ்சின் பரிதாபகரமான நிலைமையைப் பார்த்த பூனைக்கும் கொஞ்சம் மனது இரங்கிற்று. "எலிக் குஞ்சே! நீ பயப்படாதே. நான் உன்னை ஒன்றும் செய்யவில்லை. இப்பொழுது உனக்கு என்ன வயது?" என்று பூனை கேட்டது. "நான் பிறந்து இன்னும் மூன்று மாதம் கூட ஆகவில்லையே" என்று எலி பதிலளித்தது. "அப்படியானால் உன்னை நான் வெளியில் எடுத்து விட்டு விடுகிறேன். உனக்கு ஒரு வயது ஆனவுடன் என்னிடம் வந்து எனக்கு ஆகாரமாக உதவ வேண்டும். என்ன சொல்லுகிறாய்?" என்று பூனை கேட்டது. "சரி, அப்படியே வருகிறேன்" என்று எலிக் குஞ்சும் ஒப்புக் கொண்டது.

அடுத்த நிமிஷம் பூனை தன் வாலை பானைக்குள் விட்டது. எலிக் குஞ்சும் பூனையின் வாலைக் கவ்விக் கொண்டு பானையை விட்டு வெளியே வந்தது. "ஏ, எலிக் குஞ்சே! ஞாபகம் இருக்கட்டும். ஒன்பது மாதங்கள் ஆனவுடன் நீயாகவே என்னிடம் வர வேண்டும்" என்று சொல்லி எலிக் குஞ்சைத் தடவிக் கொடுத்தது பூனை.

எலி சந்தோஷங் கொண்டு ஓடோடியும் தாயாரிடம் சென்றது. நடந்த சமாசாரங்களையும் சொல்லிற்று. தன் குழந்தை தப்பி வந்ததை நினைத்து எலிக் குஞ்சின் தாயார் சந்தோஷம் அடைந்தது. ஆனால் ஒன்பது மாதத்தில் தன் குழந்தை பூனைக்கு இரையாக வேண்டுமே என்று கவலைப்பட்டது. அப்போது எலிக் குஞ்சு "அம்மா நீ கவலைப்படாதே. நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று தன் தாயாரைச் சமாதானம் செய்தது.

ஒன்பது மாதம் ஆயிற்று. பெரிதான எலிக் குஞ்சு வெளியே சற்று உலாவச் சென்றது; அப்பொழுது அதை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்த பூனை ஒரே தாவாகத் தாவி எலியைப் பிடித்துக் கொண்டது.

"ஏ எலியே, நீ என்னிடம் சொல்லியபடி ஏன் நீயாகவே என்னிடம் வரவில்லை?" என்று தன் வாயினருகில் எலியைக் கொண்டு போயிற்று.

பயந்த எலி "பூனையாரே! கோபித்துக் கொள்ளாதீர். நீங்கள் என்னைக் காப்பாற்றிய போது நான் எங்கிருந்தேன் தெரியுமா?" என்று கேட்டது. "கேட்பானேன்? கள்ளுப் பானையில்தான்!" என்றது பூனை. "அப்படியானால் நான் குடி மயக்கத்தில் ஏதோ உளறிய வார்த்தைகளைக் கேட்டு என்னை கொல்லப் பார்க்கின்றீர்களே, இது நியாயமா?" என்று கேட்டது.

எலியின் வார்த்தையைக் கேட்டவுடன் பூனைக்குச் சிரிப்பு வந்தது. "ஹி! ஹி!" என்றும் சிரித்து விட்டது. "எலியே! உன் சாமர்த்தியத்திற்கு மெச்சினேன். உன்னை ஒன்றும் செய்யாமல் இதோ விட்டு விடுகிறேன்" என்று எலியைக் கீழே விட்டுவிட்டது. எலியும் பூனையின் முதுகில் ஒரு தட்டுத் தட்டிவிட்டு ஓடோடியும் தன் தாயாரிடம் சென்றது.



# பாழாய்ப் போகிறது!

"வஸந்தன்"

ஸியாமளா தன் பிறந்தகத்துக்கு வந்திருந்தாள். வந்த இடத்தில் அவளுக்கு உடம்பு திடீரென்று அசௌகரியமேற்பட்டதால் எதிர்பார்த்தபடி ஊருக்குக் கிளம்ப முடியவில்லை. அவளுக்கு வயிற்று வலி தாங்க முடியாமல் போகவே அவளை ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்கு அனுப்பினார்கள். அவளுக்கு ஆஸ்பத்திரியில் இருப்புக் கொள்ளவே இல்லை. படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தாள்.

இரண்டு தினங்களுக்கெல்லாம் ஊரிலிருந்து அவள் சிநேகிதி ஸரஸா வந்தாள். "இப்படி எல்லாம் உடம்பை அலட்டிக் கொண்டால் அப்புறம் தெரியுமா?" என்று சொல்லிக் குழந்தைக்குப் பயம் காண்பிப்பது போல் ஸரஸா நாக்கை நீட்டினாள். அப்பொழுதுதான் ஸியாமளாவுக்குப் ப்ரக்ஞை வந்ததுபோல் இருந்தது. "ஸரஸா! என்னத்திற்காக இப்படி வயிற்று வலி வரவேண்டும்? இங்கே வந்து நாலு நாளாய் இப்படிப் படுத்துக் கொண்டு இருக்கிறேனே! வீடு வாசல் எல்லாம் இத்தனை நாள் பாழாய்ப் போயிருக்குமே. நான் என்னடி செய்ய?" என்று திடீரென்று புலம்ப ஆரம்பித்தாள் ஸியாமளா.

"நன்றாயிருக்கிறது! பாழாய்ப் போகிறதாவது? எதற்காகப் பாழாய்ப் போகிறது?" என்று கேட்டாள் ஸரஸா.

"ஏழெட்டு நாளாய் நான் இல்லாமல் குழந்தைகளுக்கு வேளா வேளையில் யாரடி சாதம் போடுவார்கள்? இளைத்துத் துரும்பாய்ப் போயிருப்பார்களே!"

"இல்லையே, இந்த நாலு நாளில் ஒவ்வொருவருக்கும் இரண்டு பவுண்டு நிறை கூட ஆகியிருக்கிறது. ஹோட்டலிலிருந்து 'டாண்' என்று வேளா வேளையில் அவர்களுக்குச் சாப்பாடு வந்து விடுகிறது. இதற்காக ஏன் கவலைப் படுகிறாய்?"

"என்னைக் காணாமல் குழந்தைகள் ஒரு நிமிஷம் கூட இருக்க மாட்டார்களே. அதுவும் கிட்டு 'அம்மா, அம்மா!' என்று புலம்பிக்கொண்டே இருப்பானே?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. குழந்தைகள ரொம்ப சமத்தாயிருக்கு."

"அப்படியானால் நான் இல்லாமல் இப்போது அவர்கள் ஏங்கிப் போகவில்லை என்கிறாயா? இது என்னடி அதிசயமாயிருக்கு? ஆமாம்; அவர் கதி என்ன? நான் வீட்டிலே இருக்கும்போது ஏதாவது புஸ்தகங்கள் வாசிக்கச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருப்பாரே, இப்பொழுது யார் வாசித்துக் காண்பிப்பார்கள்? உடம்புக்கு வந்து எல்லாம் பாழாய்ப் போகிறதே!"

"இதெல்லாம் உன் கற்பனைதான்; இப்பொழுது சாயங்கால வேளைகளில் குழந்தைகளை அழைத்துக்கொண்டு உலாவப் போகிறார். சிற்சில சமயம் தானாகப் புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறார். அநாவசியமாகவெல்லாம் உன் மனசைப் புண் பண்ணிக் கொள்ளாதே!"

"அதுதான் போகட்டும்; தோட்டத்தில் போட்டிருக்கிற கொத்தவரக் காயை யார் பறித்து வற்றல் போடுவார்கள்? எல்லாம் பாழாய்த்தானே போகும்?"

"வேலைக்காரி எல்லாவற்றையும் பறித்து என்னிடம் கொண்டு வந்து கொடுத்தாள். நான் வற்றல் போட்டுப் பத்திரமாக வைத்திருக்கிறேன். இந்த மாதிரி சின்ன விஷயங்களுக்குக் கூடவா சஞ்சலப்படுவார்கள்?"

"லேடீஸ் கிளப்பு இந்த சமயத்தில் எந்த நிலையில் இருக்கிறதோ, தெரியவில்லையே! நான் ஒரு நாள் போகாமற் போனாலே வெறிச்சென்று இருக்கிறதென்று எல்லாரும் சொல்வார்களே? எல்லாம் பாழாய்த்தான் போயிருக்கும்."



"ரொம்ப அழகுதான் போ! ஒன்றும் குறைச்சலில்லாமல் எல்லாம் நடந்து வருகிறது. உனக்குப் பதிலாக மிஸ் ஜானகியை ஆக்டிங் காரியதரிசியாகப் போட்டிருக்கிறார்கள். எப்பொழுதும் போல் காரியங்கள் ஜோராய் நடந்து வருகின்றன. இனிமேலாவது உன் கவலையை விட்டு விடப் போகிறாயா, இல்லையா?"

"என்ன இருந்தாலும் நான் இருக்கிறது போல் எப்படியாகும்? அடுத்த மர்தம் ஊனப்பில் டிராமா போடப் போகிறோமே, அதற்கு ஆக்டர்களுக்கு யார் பாட்டுச் சொல்லிக் கொடுப்பார்கள்? நான் இல்லாமல் ..."

"பாழாய்ப் போகிறது என்றுதானே சொல்லப் போகிறாய். உன் காலில் விழுந்து கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். 'பாழாய்ப் போகிறது' என்கிற வார்த்தையை மட்டும் இன்னொரு தடவை சொல்லாதே! டிராமாவுக்கு எல்லா ஏற்பாடுகளும் மும்முரமாய் நடந்து வருகின்றன. சங்கீத பூஷணம் மிஸஸ் மனோகரம் ரொம்ப அழகாய்ப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறாள். டிராமா நீ எதிர்பார்ப்பதைவிட அமர்க்களமாய் நடந்து விடும். வீணாகக் கவலைப்பட்டு உடம்பை அலட்டிக் கொள்ளாதே."

திடீரென்று சியாமளாவுக்குக் 'குபீ'ரென்று அழுகை பொத்துக்கொண்டு வந்தது. ஸரஸு திகைத்துப் போய் விட்டாள்.

"ஐயோ! நான் இல்லாமல் எல்லாம் சரியாக நடக்கிறதென்கிறாயா? இது ரொம்ப அநியாயமாகவல்லவா இருக்கிறது?" என்று அழ ஆரம்பித்து விட்டாள் சியாமளா. ஸரஸாவுக்குச் சிரிப்பு வந்தது.

"ஏன்? நீ இல்லாமல் உலகத்திலே ஒன்றும் சரியாக நடக்கக் கூடாதா, என்ன? உலகமே அஸ்தமித்துப் போய் விட வேணுமா என்ன?" என்று கேட்டு விட்டாள் ஸரஸா.

"அதற்காகச் சொல்லவில்லை. நான் வராவிட்டால் மிஸஸ் மனோகரம் டிராமாவைக் குட்டிச்சுவராக அடித்து விடுவாள். முடியாது, முடியாது! நான் ஒரு க்ஷணங் கூட இங்கே இருக்க மாட்டேன்" என்று சொல்லிக் கொண்டே படுக்கையை விட்டு எழுந்திருந்து நடக்க ஆரம்பித்தாள் சியாமளா.

அவளுடைய பாழாய்ப்போன வயிற்று வலி தொலைந்த விஷயத்தில் ஸரஸுவுக்கும் சந்தோஷமாய்த்தானிருந்தது.

# கம்பர் தரும் காட்சி

[ டி. கே. சிதம்பரநாத முதலியார் ]

## 43. நள்ளிரவில்

ராமன் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரும், அயோத்தி நகரத்தை விட்டு, சுமந்திரன் செலுத்திய தேரில் ஏறி வெளியே போய்விடுகிறார்கள். இருட்டியும் விட்டது. வெகு தூரம் போய் விட்டார்கள். தேர் வேகமாய்ப் போன காரணத்தால் வெகு சீக்கிரத்தில் எட்டிப் போக முடிந்தது. இரண்டு யோசனை தூரம் போனதும் ஒரு சோலையில் தேர் நின்றது. அங்கே முனிவர்களது ஆசிரமம் ஒன்று:

திருநகர்க்(கு) யோசனை
  இரண்டு சென்(று), ஒரு
விரைசெறி சோலையை
  விரைவின் எய்தினன்;
இரதம்நின்(று) இழிந்தபின்,
  ராமன் இன்துணை
உரைசெறி முனிவரோ(டு)
  உறையுங் காலையே.

[திருநகர்க்கு யோசனை இரண்டு சென்று: அயோத்தியிலிருந்து இரண்டு யோசனை தூரம் கடந்து; விரைசெறி சோலையை: புஷ்பங்களால் வாசனை மிகுந்த சோலையில்; இன்துணை உரைசெறி முனிவரோடு: தனக்கு மிகவும் வேண்டியவர்களான புலமை மிக்க முனிவர்களோடு; உறையுங் காலையே: தங்கியிருக்கும் சமயத்தில்.]

முனிவர்களோடு உல்லாசமாய்ப் பெரிய பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறான் ராமன். அப்போது, ஆசிரமத்திற்கு வெளியேயுள்ள இடங்களில் நாலா பக்கத்திலுமே ஒரு காட்சி தென்பட்டது:

வட்டமோர் யோசனை
  வளைவிற் றாய், நடு
என்த்தனை இடவும்ஓர்
  இடமி லாவகைப்
புன்த்தரு சோலையின்
  புறத்துப், — போர்த்தன
விட்டது, குரிசிலை
  விடாத சேனையே

[வட்டமோர் யோசனை வளைவிற்றாய்: ஒரு யோசனை வட்டம் என்று சொல்லும்படியாய் வளைந்து; நடு என்தனை இடவும்ஓர் இடமிலாவகை: எள்ளைப் போடவும் இடமில்லை என்று சொல்லும்படியாக; புன்தரு சோலையின் புறத்து: பறவைகள் நிறைந்த ஆசிரமத்துச் சோலைக்குப் புறம்பெல்லாம்; போர்த்தன விட்டது: அப்படியே போர்த்து விட்டது;—எது?—குரிசிலை விடாத சேனையே: ராமனை விடாமல் அயோத்தியிலிருந்து பின் தொடர்ந்து வந்த பெருங் கூட்டம்; (சேனை என்பது பட்டாளமல்ல; ஆடவர் பெண்டிராகிய பெருங் கூட்டம்.) குறிப்பு: 'போர்த்தன விட்டது' என்ற சொற்றொடரில், 'விட்டது' என்கிற வார்த்தை எதுகையில் வந்து அழுத்தமாய் விழுகிறது — "ஐயோ, காரியம் தொலைந்து போய் விட்டதே!" என்று கையை உதறும் பாவம்.

வந்தவர்கள் நதிக் கரையிலும், மணல்ப் பரப்பிலும், பைம்புல் தரையிலும் அப்படி அப்படியே தங்கினார்கள்.

குயின்றிய குலமணி
  நதியின் கூலத்தில்,
பயின்றுயர் வாலுகப்
  பரப்பில், பைம்புலில்,
வயின்தொறும் வைகினர்;
  ஒன்றும் வாய்மடுத்(து)
அயின்றிலர்; துயின்றிலர்;
  அழுது விம்மினர்.

[குயின்றிய குலமணி நதியின் கூலத்தில்: அரிய ரத்தினங்களைப் பதித்துள்ளதுபோன்ற நதியின் கரையில்; பயின்று உயர் வாலுகப் பரப்பில்: செங்குத்தாய் அல்லாமல் படிப் படியாய் உயர்ந்துள்ள மணல் பரப்பில்;

வயின்தோறும்: ஆங்காங்கு இடம் அமைத்துக் கொண்டு; அயின்றிலர்: ஆகாரம் ஒன்றும் உட்கொள்ளாமல்; துயின்றிலர்: உறக்கமுமில்லாமல்.]

பெண்கள் ஆங்காங்கு சோர்ந்து படுத்திருந்தது தனிப்பட்ட அழகாய் இருந்தது. கண்கள் மூடியிருந்தது, நீலோத்பல மலர் முகிழ்த்திருந்தது போல் இருந்தது. அலங்காரமாக அணிந்திருந்த டாக்கா மஸ்லின் போன்ற மெல்லிய ஆடைகளைக் கொய்து தலைக்கு அணையாக வைத்துக் கொண்டார்கள். கூந்தல் விரிந்து கீழே கிடந்த காட்சி, கவரிமான்கள் படுத்திருந்தனவோ என்று சொல்லும்படியாக இருந்தது. சோர்வு மிகுதியால் சிறிது நேரஞ் சென்றதும் உறங்கிவிட்டார்கள்.

வாவி விரி தாம ரையின்
மாம லரில், வா சக்
காவி விரி நாளம லர்
முகிழ்த்த னைய கண் ணார்,—
ஆவி விரி பால்நு ரையின்
ஆடை அணை யா க,
நாவி விரி கூழை இள
நவ்வி யர்து யின் றார்

[வாவி விரி தாமரையின் மாமலரில்: தடாகத்தில் விரிந்துள்ள தாமரை மலர்போன்ற முகத்திடையே; வாசக் காவி விரி நாள மலர் முகிழ்த்தனைய கண்ணார்: வாசனை கமழும் நீலோத்பல மலர் பகல் எல்லாம் விரிந்து மாலையில் (தாமரை மலரிடத்தே) முகிழ்த்தது போன்ற கண்ணார்; ஆவி விரி பால் நுரையின் ஆடை அணையாக: ஆவி எழும்படியாகப் பொங்கிய பால் நுரையை ஒக்கும்படி கொய்து வைத்து; (டாக்கா மஸ்லினைப் போன்ற ஆடையைத் தலைக்கு அணையாக வைத்துக்கொண்டு.) நாவி விரி: நைலத்தின் புனுகு வாசனை பரவுகிற; கூழை இள நவ்வியர்: கூந்தலோடு கூடிய கவரிமானை ஒத்த பெண்கள்; துயின்றார்: தூங்கி விட்டார்கள்.]

சண்பகச் சோலைகள் இருந்தன. பூங்கொம்புகள் வதங்கிக் கிடந்ததுபோல் சிலர் அந்தச் சோலைகளில் படுத்திருந்தார்கள். மற்றும் சிலர் மணல்மேட்டில் படுத்திருந்தார்கள்; ஏதோ பவளக் கொடி வளர்ந்து படர்ந்து கொடி வீசிய மாதிரி யிருந்தது அவர்கள் அயர்ந்து கிடந்த நிலைமை.

சம்ப கந றும்பொ ழில் —
களின்த ருண வஞ் சிக்
கொம்ப ழ(கு)ஒ சிந்த ன
எனச்சி லர்கு ழைந் தார்;
வம்ப ளவு கொங்கை யொடு
வாணு கம்வ ளர்க் கும்
செம்ப வள வல்லி கள்
எனச்சி லர்அ யர்ந் தார்.

[சம்பக நறும்பொழில்களில்: சண்பகச் சோலைகளின் கீழ்; தருண வஞ்சிக் கொம்பு: இளம் பூங்கொடி; அழகு ஒசிந்தன என: தன் அழகெல்லாம் வதங்கியது போல; வம்பு அளவு: ரவிக்கை அணிந்த; வாணுகம் வளர்க்கும் செம்பவள வல்லிகள் என: மணல் மேட்டில் வளர்ந்த பவளக்கொடிகளை ஒத்து.]

நேரம் ஆக, ஆகப் பெண்களைப் போல மற்றவர்களும் உறங்கி விட்டார்கள். ராமனுக்கோ உறக்கம் வரவில்லை. சுமந்திரனை மெதுவாக 'வா' என்று அழைக்கிறான்.

ஏனை யரும் இன்ன ணம்
உறங்கி னர், உறங் கா
மான வனும் மந்தி ரிசு —
மந்தி ரனை வா என்(று),
'ஊன மில்பெ ருங்கு ணம்
ஒருங்கு டைய உன் னால்
மேல்நி கழ்வ(து) உண்(டு) அவ் வுரை
கேள்'எ னவி ளம் பும்:

[ஏனையரும் இன்னணம் உறங்கினர்: பெண்கள் அல்லாத மற்றவர்களும் மேலே சொன்ன வாறுக உறக்கம் வந்து உறங்கி விட்டார்கள்; உறங்கா மானவனும்: உறக்கம் வராத குணசீலனான ராமனும்; ஊனமில் பெருங்குணம் ஒருங்குடைய உன்னால்: பழுதில்லாத உயர்ந்த குணங்களை யெல்லாம் ஒருங்கே யுடைய உன்னுடைய உதவியால்; மேல் நிகழ்வது உண்டு: அடுத்தநாள் போல் நடக்க வேண்டிய காரியம் ஒன்று இருக்கிறது; விளம்பும்: அந்த விஷயத்தைக் கேட்பாயாக என்று சொன்னான்.]

சுமந்திரனை ரகசியமாகக் கூப்பிட்டு ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறான் ராமன். அந்த விஷயம் இன்னதாய் இருக்குமென்று நமக்கு ஊகிக்க முடியவில்லை, அதை அடுத்த இதழில் பார்க்கலாம்.

# வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




★

வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய், கீரைத்தண்டு, வாழைத்தண்டு கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு - சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது - முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஜாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர். உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.

★

## டி. எஸ். ஆர். அண்டு கோ.,

வாஸனை திரவிய வியாபாரிகள்,

கும்பகோணம்.

மதராஸ் சோல் ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டுகள் :

சுவாமிநாதய்யர் அண்டு சன்ஸ்.,

புதுக்கோட்டை

சாரதா ஸ்டோர்ஸ்

காரைக்குடி

மெஸர்ஸ். சண்டிகா அண்டு கோ.,

முதல் அக்ரஹாரம், சேலம்



# காலக்ஷேபம்

## நூறு ரூபாய் சங்கீதம்

"ஏனய்யா, பக்கத்து வீட்டுக்காரருக்கு நூறு ரூபாய் கடன் கொடுத்தீரே, அதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீரா?"

"ஆம்! தினந்தோறும் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன், அவர் அந்த நூறு ரூபாயைக் கொண்டு வாங்கியிருக்கும் கிராமபோன் சங்கீதத்தை!"

—கே. பத்மநாபன்.

* * *

## நியாயம்தானே?

**மோட்டார் டிரைவர்:**—என்னப்பா, இது? உன் காலில் கார் ஏறி விட்டதற்காக ஆயிரம் ரூபாய் நஷ்டஈடு கேட்கிறாயே! நான் என்ன லக்ஷப் பிரபுவா, உனக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்க?

**அடிபட்டவன்:**—அது சரி அப்பா! எனக்கு மாத்திரம் லக்ஷம் கால் இருக்கிறதா, ஒன்று போனால் போகிறது என்பதற்கு? —எம். ராஜம்மாள்.

* * *

## கவனித்த பையன்

உபாத்தியாயர் பாடம் சொல்லும் போது தன்னையே வெகு கவனமாய் உற்று நோக்கிக் கொண்டிருந்த ஒரு பையனைப் பார்த்து, "இப்போது ஜம்புலிங்கம்! நான் சொன்னதில் விசேஷமாக என்ன காணப்பட்டதோ அதைச் சொல், பார்க்கலாம்" என்றார்.

**ஜம்புலிங்கம்:**—தாங்கள் உள் சட்டையைத் தலைகீழாய்ப் போட்டுக் கொண்டிருக்கிறீர்கள் ஸார்!

—ஜே. கே. நீலகண்டன்.

* * *

## கிடைத்த சாமான்கள்

**ஒருவர்:**—நேற்று உன் வீட்டில் போலீஸார் சோதனை போட்டபோது என்ன கிடைத்தது?

**மற்றவர்:**—எங்கள் வீட்டு வேலைக்காரி மறைத்து வைத்திருந்த மறு சாவி, சென்ற வாரம் காணாமற் போன என் சட்டைப் பொத்தான், ஒரு ஓரணா லேபின் முதலியன கிடைத்தன.

—பழனியப்பன்.

## தெரிந்த விதம்

**சிநேகிதி:**—உங்கள் கணவர் 'டீ' தான் சாப்பிடுவார் போலிருக்கே? காப்பி பிடிக்காதாக்கும்.

**மற்றவள்:**—உங்களுக்கு அது எப்படித் தெரிந்தது?

**சிநேகிதி:**—இப்பொழுது நீங்கள் எனக்குப் போட்டுக் கொடுத்த காப்பியினால்தான். —பி. துரைசாமி.

* * *

## ஒரு வழி

**வீட்டுக்காரர்:**—என்ன ஐயா! நான் தினம் ஒரு தடவை வந்து வந்து பணம் கேட்டுக் கால் வலி எடுத்துப் போகுது! இதற்கு இப்போ ஒரு வழி சொல்லுங்க, சொல்லிப்பிட்டேன்!

**குடித்தனக்காரர்:**—வழி சொல்லுகிறேன். நீங்கள் இனிமேல் வாரத்திற்கு ஒரு தடவை வந்து பணம் கேட்டுக் கொண்டிருங்கள் போதும்.

—சு. ப. நடராஜன்.

* * *

## கஷ்டமில்லை

**கடைப் பையன்:**—ஸார்! நேற்று ஒரு மணிபர்ஸை ஒன்றரை ரூபாய்க்கு விற்றேன். அதில் ஒரு ரூபாய் செல்லாதது.



**மானேஜர்** (அசல் கிரயக் கணக்கை அவசரமாகப் புரட்டிப் பார்த்து விட்டு):—அடடா! அந்த அரை ரூபாயாவது நல்லதா என்று பார். இல்லாவிட்டால் கால் ரூபா நஷ்டம் வந்து விடும். —வெ. அ. ராமன்.






# நல்ல சுகத்தை விரும்புவோருக்கு

நமக்குக் கட்டாவிடினும் நாம் எல்லோரும் சுகத்தைத் தான் விரும்புகிறோம். பரம சுகம் நிறைந்த சிகரெட்டான டிலக்ஸ் டெனுரை இப்போது நம்மில் பலரும் சுலபமாக வாங்கி வெகு ஆனந்தமாக அனுபவிக்கலாம்.

ரஸிகர்களுக்கும் மெல்லிய தொண்டையுடையவர்களுக்கும் நாம் சொல்வது "ஒரு முறை நீங்கள் டெனுர் சிகரெட்டை அனுபவித்துப் பார்த்தால் என்ன?" அதை நீங்கள் நிச்சயமாக விரும்புவீர்கள் என்பதில் சந்தேகமில்லை.

பெரிய அல்லது ஸ்டாண்டர்டு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்.



BY APPOINTMENT TO THE MOST HONOURABLE THE MARQUESS OF LINLITHGOW, VICEROY AND GOVERNOR GENERAL OF INDIA

# TENOR

## de luxe CIGARETTES




உங்களது உத்தரவாதம்

டி லக்ஸ் டெனுர் சிகரெட்ஸ்

ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்

EASTERN LICENCEES — P. B. NO 9029 — CALCUTTA.

T-10 ACI








'அசோகா' பாக்குத் தூள் வாய்க்கு ருசி, மனதுக்கு ரம்யம்.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras